# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 [illegible] வருடத்திற்குள் செலுத்தலாம்.

[illegible] வரும் சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது அவர்க்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


விவரங்களுக்கு:

தொலைபேசி: 71231



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்

## மூன்று பகுதிகள்

**ஒவ்வொரு பகுதியும் சுமார் 600 பக்கங்கள் கொண்டது.**

டெம்மி சைஸ் அழகான காலிகோ பைண்டிங்
(பிளாஸ்டிக் ஜாக்கெட்)

**1983 ஜனவரி இறுதிக்குள் பதிவு செய்து கொள்பவர்களுக்கு சலுகை விலை செட் ஒன்றுக்கு ரூ. 50 மட்டும்**

அன்புடையீர்,

வணக்கம். இறைவனது திருவருளால் **பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் திருவாய் மலர்ந்தருளிய அமுத மொழிகளைத்** தமிழ்மக்களுக்கு நூல்வடிவில் அளிக்கும் வாய்ப்பு கிடைத்தமைக்குப் பெரிதும் மகிழ்கிறோம்.

**ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்,** உலக இன்பங்களைத் தேடியலையும் மக்களுக்கு உண்மையான இன்பம் எதுவென்று உணர்த்துவது மட்டுமல்லாமல், அந்த இன்பத்தை அடைய வழியையும் காட்டுகின்றன. உலகமாயையில் சிக்கி, உய்யும் வழிகாணாது தத்தளிக்கும் மனித இனத்திற்கு, இவ்வமுத மொழிகள் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்கின்றன. இந்து சமுதாயத்திற்கு, ஏன்? உலகத்திற்கேகூடத் தேவையான உண்மைகள் இவரது உபதேசங்களில் காணக்கிடைக்கின்றன.

''தெய்வ பக்தி ஒரு மனித உருக்கொண்டாற் போன்ற இவரது ஆன்மிக அனுபவங்கள் நிறைந்த வாழ்க்கை உலக நன்மைக்காகவே எழுந்தது. இவரது உபதேசங்கள் இறைவனை நேருக்கு நேர் நாம் காணுமாறு செய்ய வல்லவை. கடவுள் ஒருவரே உண்மை; மற்ற அனைத்தும் மாயை என்பதை இவ்வுபதேசங்களைப் படிப்போர் உணராமற் போகார்'' என்றார் **காந்தியடிகள்.**

இறைவனின் இயல்புகள், பக்தியின் பல்வேறு நிலைகள், ஞானத்தைப் பற்றிய பல்வகை விளக்கங்கள், மாயையைப் பற்றிய தெளிவான விரிவுரைகள், வேத, சாஸ்திர, புராண, இதிகாச நூல்களில் புரியாதன, பொருந்தாதன என ஒதுக்கிவிடப்பட்ட கருத்துக்களில் அடங்கிக் கிடந்த தத்துவங்கள்—இவற்றை அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் சம்பவங்கள், எளிய உதா

ரணங்கள் வாயிலாகவும், பொருத்தமான கருத்தாழ மிக்க கதைகள் வாயிலாகவும் தெள்ளத் தெளிவாக விளக்குகின்றார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர். பொருள் பொதிந்த ஒரு மதத்திற்காகத் தாய்நாடு ஏங்கிக் கொண்டிருந்த காலத்தில் பாமரமக்களுக்கும் பயன் படும் வகையில் ஹிந்து சமயத்தை நிலைநிறுத்தினார் குருதேவர்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடராக விளங்கிய மஹேந்திரநாத் குப்தா என்பவர் குருதேவர் தம் சீடர் களுடனும், பக்தர்களுடனும் தம்மைக்காணவந்தமக்கட் கூட்டத்துடனும் நிகழ்த்திய உரையாடல்களைத் தாம் கேட்டவண்ணமே அன்றாடம் தமது நாட்குறிப்பில் குறித்துவைத்திருந்தார். **ம**- என்று அழைக்கப்பட்ட இம் **மகேந்திரர்** பரமஹம்சரை முதன் முறையாக 1882-ல் பிப்ரவரி 26ஆம் தேதி சந்தித்தார். இந்த முதல் சந்திப்பிலேயே குருவும் சீடரும் ஒருவரை யொருவர் நன்கு புரிந்துகொண்டனர். அன்று முதற் கொண்டு பரமஹம்சர் மகாசமாதி அடைந்தவரை ஏறக்குறைய 5 ஆண்டுகளுக்கும் மேலாகக் குருதேவரைக் கணக்கற்ற தடவைகள் சந்தித்துவந்தார். இவரது நாட்குறிப்பில் வரையப்பெற்ற விலை மதிப்பிடமுடியாத ஆன்மிகப் பொக்கிஷத்தைப் பிற்காலத்தில் நூலாகத் தொகுத்து **ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்** என்ற பெயர்சூட்டி வங்க மொழியில் 5 பகுதிகளாக வெளியிட்டார். இந்நூல் ஆங்கிலம் முதலான பல மேலைநாட்டு மொழிகளிலும், எல்லா இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. தமிழில் இல்லாத குறை இன்று தீர்வ தாயிற்று.

இவற்றை அப்படியே வங்காளத்திலிருந்து மொழி பெயர்த்து எளிய நடையில் தமிழ்மக்களுக்கு அளிக்கும் பணியை இப்போது சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடம் மேற் கொண்டுள்ளது. இந்நூல் தமிழில் மூன்று பகுதி களாக வெளிவர உள்ளது. ஒவ்வொருபகுதியும் சுமார் 600 பக்கங்கள் (டெம்மிசைஸ்) கொண்டதாகும். முதற் பகுதி அச்சாகிக் கொண்டிருக்கிறது. 1983-ம் ஆண்டு ஜனவரி இறுதிக்குள் இது வெளிவரும் என்று எதிர்பார்க் கிறோம். இதைத் தொடர்ந்து அடுத்துள்ள இரு பகுதி களும் அடுத்த ஆண்டு இறுதிக்குள் அச்சாகிவிடும்.

இம் மூன்று பெரிய புத்தகங்களை அச்சிட இப்போது

இருக்கும் காகித விலையில் கிட்டத்தட்ட மூன்று இலட்சம் ரூபாய் செலவாகும். எல்லாப் பகுதிகளும் அச்சாகி வெளிவரும் பொழுது மூன்று பகுதிகளும், சேர்ந்து விலை சுமார் ரூ. 100/- ஆகலாம். பக்தர்களின் பொருளாதார நிலையை மனத்திற் கொண்டு **பிரசுர விலையை ரூ. 50/- ஆகக் குறைத்துக் கொடுக்கத் திட்டமிட்டுள்ளோம்; இச்சலுகை 1983 ஜனவரி மாதம் இறுதிவரை உண்டு.**

பக்தர்கள் உடனடியாக அமுதமொழிக்குப் பணம் செலுத்தித் தங்கள் பெயர்களைப் பதிவுசெய்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

முழுப்பணத்தையும் ஒரே சமயத்தில் செலுத்த இயலாதவர்கள் இரண்டு அல்லது மூன்று தவணைகளில் செலுத்தலாம்.

புத்தகம் பிரசுரமானதும் அறிவிக்கப்படும். சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் பிரதிகளை நேரில் பெற்றுக் கொள்ளலாம். தபாலில் பெற விரும்புவோர் அதற்கான கட்டணத்தைச் செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம்.

கீழே கொடுத்துள்ள கூப்பனைப் பூர்த்திசெய்து பணத்துடன் அனுப்பவும். மணியார்டர் அல்லது காசோலை மூலம் பணம் அனுப்பலாம்.

**இத்திருப்பணிக்கு அன்பர்கள் தாராளமாக நன்கொடை அளித்து உதவுமாறு வேண்டுகிறோம்.**

சென்னை-4 கடவுள் தொண்டில்
1—11—82 **சுவாமி தபஸ்யாநந்தர்**

.................................................................................................

சுவாமிகளுக்கு,

நான்............*செட் அமுதமொழிகள் (மூன்று பகுதிகள்) பிரசுர விலையில் வாங்க ஆசைப்படுகிறேன். அதற்கான விலையைச் செட் ஒன்றுக்கு ரூ. 50/- வீதம் உடன் அனுப்பியுள்ளேன். தவணை /1/2/3

என் பெயரைப் பதிவுசெய்து புத்தகங்களை அனுப்பித்தரவும்.

* (எவ்வளவு செட் என்று குறிப்பிடவும்)

இப்படிக்கு,

பெயர் :

விலாசம் : (கையொப்பம்)

# சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 20,001 முதல் 20,160 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜனவரி மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 12ஐ ஜனவரி 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 30001 முதல் 30644 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை பிப்ரவரி மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 40001 முதல் 40281 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 50,000 முதல் 50,208 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஏப்ரல் மாதத்துடன் முடிவடைகிறது.

மேலே குறிப்பிட்டுள்ள எண்களுக்கிடையில் உள்ள சிலர், ஏற்கனவே சந்தாவை அனுப்பிப் புதுப்பித்துக் கொண்டிக்கிறார்கள். அவ்விதம் புதுப்பித்துக் கொள்ளாத அன்பர்கள் கூடிய விரைவில் சந்தாவைச் செலுத்திப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறோம்.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாவே செலுத்துவதானால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆண்டுதோறும் ரூ. 12 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூ. 150 செலுத்திவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும்.

வாசகர்கள் மூன்று புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துப் புத்தாண்டை ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்துடன் துவக்கும்படி செய்யலாம்.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 12 போக மீதி ரூ. 138–யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ ஒரு வருடத்தில் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வதாகும்,

* பலமுறை சரிபார்த்தபின்பே சந்தாதாரருக்குப் பத்திரிகைத் தபாலில் அனுப்பப்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்திலிருந்து டிசம்பர் மாதம் சந்தாதாரருக்கு அனுப்பப்பட்ட 'விஜயம்' பிரதிகளில் சுமார் 40 பிரதிகள் எங்களுக்கே திரும்பி வந்து சேர்ந்தன. சில நாட்களுக்குப் பிறகு அதே சந்தா அன்பர்கள், தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கடிதம் எழுதுகிறார்கள். தாங்கள் ஊரிலோ வீட்டிலோ இல்லாத சமயங்களில் இதனைப் பெற்றுத் தங்களிடம் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்துகொள்ளுங்கள்.

* விலாச மாற்றம் இருக்குமானால் உடனுக்குடன் எங்களுக்குத் தகவல் தெரிவியுங்கள். இல்லாவிடில் பழைய விலாசத்திற்கே பத்திரிகை சென்றுகொண்டிருக்கும். தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைச் சரிபார்த்துக் குறை இருப்பின் உடனடியாகப் பின்கோடுடன் தெரிவியுங்கள்.

நிர்வாகி,

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | ஜனவரி—1983 | இதழ் 1

பொருளடக்கம்





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| தொகுதி 63 | துந்துபி ௵ தை ௴ | இதழ் 1 |
|---|---|---|







अगजाननपद्मार्कं गजाननमहर्निशम् ।
अनेकदं तं भक्तानामेकदन्तमुपास्महे ॥

அகஜானந-பத்மார்க்கம் கஜானனமஹர்நிசம் ।
அநேகதந்தம் பக்தாநாம் ஏகதந்தமுபாஸ்மஹே ॥

பர்வதராஜன் மகளாகிய பார்வதியின் முகமாகிய தாமரையை மலரச் செய்யும் சூரியனும், எப்போதும் விளங்கும் யானைமுகத்தோனும், தன் பக்தர்களுக்குக் கணக்கற்ற வரங்களை அளிப்பவருமான ஒற்றைத் தந்தம் கொண்ட மகாகணபதியை வணங்குகிறேன்.

அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையா யென்னெஞ்சத் துறப்பிப்பாய் நீ
இப் பொன் நீ இம் மணி நீ இம் முத்தும் நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.

—தேவாரம்




வெள்ளி, செப்டம்பர் 26, 1884

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** மற்ற மதங்களில் பிழைகள் இருப்பதாகவே வைத்துக்கொள்வோம். என்றாலும் அந்தப் பிழைகளைத் திருத்தியமைப்பது நமது வேலை அல்ல. இந்த உலகத்திற்குச் சொந்தக்காரராகிய பகவானே அதைக் கவனித்துக்கொள்வார். நமது கடமை, எந்த விதத்திலாவது பகவானைத் தரிசிக்க வேண்டும் என்பதே ஆகும்.

(பிரம்ம சமாஜ அன்பர்களைப் பார்த்து): நீங்கள் கொண்டிருக்கும் பிரம்ம சமாஜக் கருத்து உண்மையாகவே நல்லது தான். நீங்கள் கடவுளை அருவமானவர் என்று சொல்கிறீர்கள். அது முற்றிலும் சரியே. இனிப்பான ரொட்டியை நேராகக் கடித்துச் சாப்பிட்டாலும் சரி, அல்லது குறுக்காகக் கடித்துச் சாப்பிட்டாலும் சரி, அது தித்திப்பாகவே இருக்கும்.

ஆனால் மதவெறி நல்லதல்ல. பச்சோந்தியைப் பற்றிய கதையை நீங்கள் கேட்டதில்லையா? ஒரு சமயம் ஒருவன் ஒரு வனத்துக்குள் சென்றிருந்தான். அங்கே அவன் ஒரு மரத்தின் மீது ஒரு பச்சோந்தியைப் பார்த்தான். அவன் வனத்திலிருந்து திரும்பியதும் தன் நண்பர்களிடம், ''நான் சிவப்பு நிறமுள்ள ஓர் ஓந்தியைப் பார்த்தேன்'' என்று சொன்னான். அந்த ஓந்தியின் நிறம் சிவப்புத்தான் என்று அவன் உறுதியாக நம்பினான். மற்றொரு மனிதன் அதே மரத்தைப் பார்த்துவிட்டு வந்து, ''நான் பச்சைநிறமுள்ள ஓந்தியைப் பார்த்தேன்'' என்று கூறினான். தான் பார்த்த ஓந்தியின் நிறம் பச்சைதான் என்று அந்த இரண்டாமவன் உறுதியாக நம்பினான். ஆனால் அந்த மரத்தின் கீழேயே வசித்து வந்த ஒருவன் வந்து, ''நீங்கள் இருவரும் சொல்வது உண்மைதான். அந்தப் பிராணி ஒரு சமயம் சிவப்பாகவும், ஒரு சமயம் பச்சையாகவும், ஒரு சமயம் மஞ்சளாகவும், இன்னும் வேறு சில சமயங்களில் எந்தவித நிறமும் இல்லாமலும் இருக்கிறது'' என்று கூறி விளக்கினான்.

கடவுளை வேதங்கள் சகுணமாகவும் (எல்லாவிதமான கல்யாண குணங்களோடு கூடியவராகவும்) நிர்க்குணமாகவும் (குணம் இல்லாதவராகவும்) கூறுகின்றன. பிரம்ம சமாஜத்தவராகிய நீங்கள் கடவுளை நிராகாரம் (அருவம்) என்று மட்டும் சொல்கிறீர்கள். இது ஒருசார்பாகப் பேசுவதாகும். ஆனால் அதைப்பற்றிக் கவலையில்லை. கடவுளின் வடிவங்களில் ஏதேனும் ஒன்றை உண்மையாகவே நீங்கள் அறிந்துகொள்வீர்களானால், அவனுடைய மற்ற வடிவங்களையும் அறிந்துகொள்ளும் திறமையைப் பெறுவீர்கள். கடவுளே அவற்றைப் பற்றிய அனைத்தையும் உங்களுக்கு விளக்கியருள்வார். (இரண்டு மூன்று பிரம்ம சமாஜ அன்பர்களைச் சுட்டிக்காட்டி): இந்தச் சமாஜத்துக்கு வரும் நீங்கள் இவரையும் அறிந்திருக்கிறீர்கள், அவரையும் அறிந்திருக்கிறீர்கள்.

* * *

விஜயர் அப்போதும் சாதாரணப் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவராக இருந்தார். அந்தச் சமாஜத்தில் சம்பளம் பெற்றுவந்த மதபோதகராக இருந்து வந்தார். ஆனால் இப்போதெல்லாம் பிரம்ம

சமாஜத்தின் விதிமுறைகள் எல்லாவற்றையும் அவரால் பின்பற்ற இயலவில்லை. உருவக் கடவுளிடம் நம்பிக்கை கொண்டவர்களோடு அவர் கலந்து பழகி வந்தார். இது அவருக்கும் பிரம்ம சமாஜத்தின் செயலாளருக்குமிடையே கருத்து வேறுபாடு உண்டாகக் காரணமாயிற்று. மேலும், பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த அன்பர் பலரும் விஜயரின் செயலை ஒப்புக்கொள்ளாமல் அவர்மீது அதிருப்தி கொண்டிருந்தனர். குருதேவர் திடீரென்று விஜயரைப் பார்த்து, அவரோடு பேசத் தொடங்கினர்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** (விஜயரைப் பார்த்துப் புன்சிரிப்புடன்): கடவுள் உருவம் படைத்தவர் என்ற நம்பிக்கை கொண்டவர்களோடு நீங்கள் பழகுகிறீர்கள் என்பதற்காக அவர்கள் உங்களைக் குறை சொல்வதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மைதானு? எந்த நிலையிலும் அசைந்து கொடுக்காத மனவுறுதி ஒரு பக்தனுக்குக் கட்டாயம் இருக்க வேண்டும். கொல்லனது பட்டறையிலுள்ள பட்டடை (அடைகல்) போல அவன் இருக்க வேண்டும். அது சம்மட்டியால் ஓயாமல் அடிபட்டுக்கொண்டே இருக்கிறது; எனினும் அது இருந்த இடத்தை விட்டு அசைந்து கொடுக்காமல் அப்படியே இருக்கிறது. கெட்டவர்கள் உம்மிடம் மிகவும் கொடுமையாக நடந்து கொள்வார்கள். உங்களைத் திட்டுவார்கள்; உங்களைக் குறித்து அவதூறுகப் பேசுவார்கள்; ஆனுல் நீங்கள் பகவானை உண்மையாகவே மனப்பூர்வமாகத் தேடுவீர்களானுல், அவற்றையெல்லாம் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

துஷ்டர்களுக்கு நடுவில் வாழ வேண்டிய நிலையிலும் பகவானை எப்படி நினைப்பது என்று நீங்கள் கேட்கலாம். பண்டைக் காலத்தில் வாழ்ந்த ரிஷிகளைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். அவர்கள் காட்டிலே எல்லாப் பக்கங்களிலும் புலிகளும் கரடிகளும் மற்றக் கொடிய மிருகங்களும் சூழ்ந்திருக்கும்போதும் கடவுளைத் தியானித்து வந்தார்கள். தீயவர்களிடம் புலி கரடிகளின் இயல்பே உள்ளது. உங்களுக்குத் தீங்கு செய்ய வேண்டும் என்பதற்காகவே வலுவிலே உங்களைத் தேடி அவர்கள் தொடர்ந்து வருவார்கள்.

பின்வரும் சில விஷயங்களைப்பற்றி ஒருவன் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும். முதலாவதாக, பணபலமும் தன் ஆட்சியின் கீழே பல மனிதர்களையும் பெற்றுள்ள சொற்சக்தி வாய்ந்த மனிதனிடம் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். அவன் மனம் வைத்தால் விரும்பிய மாத்திரத்தில் உங்களுக்குத் தீங்கு செய்ய முடியும். அவனுடன் பேசும் போது நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும். ஒரு வேளை அவன் சொல்வதை 'ஆமாம்' போட்டு நீங்கள் ஒப்புக்கொள்ளவும் வேண்டியிருக்கும். இரண்டாவதாக, கொடிய ஒரு நாயைப் பற்றி நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அது உங்களைத் துரத்தும் போது, அல்லது உங்களைப் பார்த்துக் குரைக்கும்போது, நீங்கள் அமைதியாக நின்று, சாந்தமாகப் பேசி, அதைச் சமாதானப் படுத்திவிட வேண்டும். மூன்ருவதாக, முரட்டுக் காளைமாடு விஷயத்தில் நீங்கள் ஜாக்கிரதையுடன் நடந்துகொள்ள வேண்டும். அது கொம்புகளைத் தாழ்த்திக் கொண்டு உங்களை நோக்கிப் பாய்ந்தோடி வரும்போது, அமைதியான குரலில் பேசி அதைச் சாந்தப்படுத்த வேண்டும். நான்காவதாக, ஒரு குடிகாரனின் விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நீங்கள் அவனது கோபத்தைக் கிளப்பிவிடுவீர்களேயானுல், உமது குடும்பத்தைச் சேர்ந்த பதினுன்கு தலைமுறையினரையும் இழிவாகப் பேசி, உங்களை வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டுவான். நீங்கள் அவனிடம், ''என்ன மாமா! சௌக்கியமாக இருக்கிறீர்களா?'' என்று கேட்க வேண்டும். அப்படிச் செய்தால், அவன் மிகவும் மகிழ்ந்து, உங்கள் அருகில் உட்கார்ந்து புகைகுடிப்பான்.

ஒரு துஷ்டனின் முன்னுல் நான் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்கிறேன். உதாரணமாக, ஒரு முரடன் என்னிடம் வந்து, ''நான் புகை பிடிக்க வேண்டும். ஹுக்கா குழாய் இருக்கிறதா?'' என்று என்னைக் கேட்டால், உடனே நான், ''ஓ, இருக்கிறதே'' என்று பதில் சொல்கிறேன்.




மைதிலி வேணுகோபால்

சூரியனை வழிபடவும், அவனுக்கு நன்றி செலுத்தவும் ஏற்பட்டது பொங்கல் பண்டிகை. வேதத்திலேயே சூரிய வழிபாடு கூறப்பட்டுள்ளது. காயத்ரி மந்திரமும் சூரியனுக்கு உகந்தது. ஆதித்ய ஹ்ருதயத்தை ஜபித்த பின்பே, ஸ்ரீராமன் ராவணனை வெல்ல முடிந்தது. சூரியனைப் பரம்பொருளாகப் புராணங்களும் கூறுகின்றன. சூரியன் இல்லையென்றால் பூமி ஏது? சூரியனை உலகுக்குத் தந்து, அவனது இரதத்தை வடக்கு நோக்கிச் செலுத்தும் நாள்தான் பொங்கல் திருநாள்.

ஒருவரிடமிருந்து ஏதேனும் உதவி பெற்றுக்கொண்டால், பதிலுக்கு நன்றி தெரிவிப்பதுதானே பண்பாடு? மழையை நன்றாகப் பெய்வித்து, அதனால் நெல் முதலிய தானியங்களைச் செழித்து வளரச் செய்து, நாட்டை சுபிட்சமாக்கும் மழைக் கடவுளான இந்திரனுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில், தமிழர்கள் பொங்கல் விழாவைக் கொண்டாடினார்கள். அதே போல, உலகத்திலுள்ள உயிர்கள் அனைத்தின் வளர்ச்சிக்குக் காரணமான சூரிய பகவானுக்கு நன்றி செலுத்தும் நல்ல நாளாகப் பொங்கல் திருநாள் விளங்குகிறது.

பசுக்கள் விழா என்று சொல்லும்படி, மாட்டுப் பொங்கலைக் கொண்டாடுகிறோம். உழவுக்கு மிகவும் முக்கியமானது மாடு. உழவுக்கு உதவியாக இருக்கும் மாடுகளை நன்றாக அலங்கரித்து வழிபடும் விழா இது.

தை மாதத்தின் முதல் தேதியே, மிகவும் மங்களகரமாகப் பொங்கலோடுதான் துவங்குகிறது. பொங்கலன்றுதான் உத்தராயண புண்ணிய காலம் ஆரம்பம். பாரதப் போர் முடிந்ததும், அம்புப் படுக்கையில் படுத்துக்கொண்டு, பீஷ்மர் உத்தராயண புண்ணிய காலத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தார்.

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது பழமொழி. பல நல்ல காரியங்களுக்கும் தை மாதம் வழி வகுக்கிறது.

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**

பொங்கல் திருவிழாவுக்காக, வீட்டிலுள்ள பழைய சட்டி, பானைகள், கந்தைத் துணிகள், உடைந்த பொருள்கள் எல்லாவற்றையும் போட்டு எரித்து, வீட்டைத் துப்புரவாக ஒழித்துச் சுத்தம் செய்து, வெள்ளையடித்து வைத்துக்கொள்வார்கள். 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்பது, மேலெழுந்தவாரியாகக் கேட்பதற்கு, ஏதோ பழைய சாமான்களை அப்புறப்படுத்திவிட்டுப் புதுசு புதுசாக வாங்கி வைத்துக்கொள்வது என்று அர்த்தமல்ல. நம் மனதிலுள்ள வேண்டாத கெட்ட குணங்களையும் எண்ணங்களையும் அறவே ஒழித்துக் கட்டிவிட்டு, நல்ல எண்ணங்களையும் சிந்தனைகளையும் வரவழைத்துக் கொள்ள வேண்டும் என்பதைத்தான் இது அறிவுறுத்துகிறது.

**கேளிக்கைகள்**

ஆடல், பாடல், கேளிக்கைகள், வீர விளையாட்டுக்களுக்கும்கூடப் பொங்கல் விழாவில் இடமுண்டு. அவ்வளவாக வெளியில் தெரியாத, வெளியில் வராத கலைகளில் மிகவும் முக்கியமானது தெருக் கூத்துக் கலை. இது கிராமங்களிலே பிறந்து, அங்கேயே வளர்ந்து வந்த கலை. அதிகம் படிக்காத கிராம மக்கள், நரசிம்மாவதாரம், கீசக வதம், பஸ்மாசுர வதம் போன்ற எத்தனையோ புராணக் கதைகளை ஆடிக் காட்டுவார்கள். மிகவும் அற்புதமாக இருக்கும். வீர விளையாட்டான ஜல்லிக் கட்டு, இளைஞர்களைக் கவருகிறது. முரட்டுக் காளைமாடு

களின் கொம்புகளில் பணம், மோதிரம் போன்ற பரிசுகளை முடிந்து வைத்துவிட்டு, சொந்தக்காரர்கள் காளைகளை அவிழ்த்து விட்டுவிடுவார்கள். முரட்டுக் காளையை அடக்கும் வீரனுக்கு அந்தப் பரிசுகள் சேரும்.

### அரிய தத்துவம்

ஓர் அரும் பெரும் தத்துவத்தையும் பொங்கல் விழா நமக்கு அறிவுறுத்துகிறது.

அடியார் நிமலத் திருஅகத்துள் அன்பு
பொறுமை அவா அறுத்தல்
அடுப்பு ஆங்கு அமைத்து, மலக்
காட்டத்ததிக ஞானக்கனல் மூட்டி
மடியாதிருந்த உயிர்க் கலசம் வழிய,
அருள் பேர் உலை வார்த்து,
மாறுப் பெருமை சிவானந்த
மதுரச் சோறு தினம் பொங்கி.



சிதம்பர சுவாமிகள் அருளிய அருமையான பாடல் இது. 'கொடுக்கப்பட்ட பொருள்களை ருசியாக, பக்குவமாகச் செய்யக்கூடிய அடுப்பாகிய மனதில், அன்பு, பொறுமை, ஆசையை அழித்தல் என்ற மூன்று கற்களைக் கொண்டு, ஞானமாகிய விறகை நன்றாகக் கொழுந்துவிட்டு எரியச் செய்து, இறையானந்தம், பரமானந்தம், சச்சிதானந்தம், சிவானந்தம் என்றெல்லாம் போற்றப்பெறும் ஆனந்த மதுரச் சோறு பொங்கி அதாவது பொங்கல் பொங்கி உண்ண வேண்டும்' என்கிறார்.

பொங்கற்பானையின் கழுத்தில் மஞ்சள், இஞ்சிக் கொத்து, கரும்பு, வாழைப்பழம் கட்டுவார்கள். மஞ்சள் மங்களப் பொருள், இறைவனுக்கு உகந்தது, சகல சௌபாக்கியங்களையும் தரும். சிறந்த கிருமிநாசினி

> **பொங்கல் வாழ்த்து**
>
> வாசகர்களாகிய பேரன்பிற்குரிய ஆன்மிக சகோதர சகோதரிகள் அனைவருக்கும் 'விஜயம்' தனது ஆழ்ந்த அன்பையும், புத்தாண்டு - பொங்கல் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறது.
>
> —ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

இஞ்சி; மருத்துவக் குணங்கள் உடையது. வாழைப்பழம் எளிமையைக் குறிக்கிறது. 'எதையும் முயற்சி செய்தால் அடையலாம்' என்றும், 'எந்தப் பொருளிலுமே நிறை-குறை இரண்டுமேதான் சேர்ந்திருக்கும். நாம்தாம் குறையைத் தள்ளி நிறையை மட்டும் எடுத்துக்கொள்ள வேண்டும்' என்றும் கரும்பு எடுத்துக்காட்டுகிறது. கரும்புச்சாறு உடலுக்கு நல்லது. மஞ்சள் காமாலை போன்ற வியாதிகளுக்குச் சிறந்த மருந்தாக இதை உபயோகிக்கின்றனர். காய்கறிகளும் பழங்களும் மலர்களும் எங்கும் குவிந்து கிடக்கும் வசந்தம் வரப் போவதை அறிவிக்கும் பண்டிகைதான் பொங்கல்.

### பொங்கும் மங்களம் எங்கும் தங்குக

பருவம் தவறாமல் பெய்த மழையாலும், சூரியபகவானின் உதவியாலும் வளமையும் செழிப்புமாக எங்கும் பச்சைப்பசேல் என்று காணப்படுகிறது. சந்தனம், அகில், கோரோசனம், கஸ்தூரி, மஞ்சள் எல்லாமே நன்றாக விளைகின்றன. புன்னாகம், வில்வம், துளசி, செந்தாழை, மல்லிகை, பாதிரி, அசோகம், நெய்தல், மகிழம்பூ, தாமரை ஆகியவை பூத்துக் குலுங்கிக் கண்ணைப் பறிக்கின்றன. இயற்கையே வாசனை மிக்கதாகத் திகழும்.

தவிரவும், மார்கழி மாதத்துத் தெய்விகச் சூழ்நிலையிலிருந்தும் உணர்வுகளிலிருந்தும் மனம் மற்ற வேறு எதிலும் ஈடுபடாமல் தூய்மையாக இருக்கும்போதே, பொங்கல் வந்துவிடுவதனால், தனிப் பெருமை பெறுகிறது.

ஆன்மிகத் தத்துவமும், அன்றாட நடைமுறை வாழ்க்கைத் தத்துவமும் பொங்கல் விழாவில் இழையோடுகின்றன.

# ‘உலகம் பெறுதல் வேண்டுவனே’

திருமுருக கிருபானந்தவாரியார்

பொறுக்க முடியாத வெப்பம் விளைகிற போது வானில் மேகம் தோன்றி மழை பொழிகிறது. அது போல் மிகுந்த அநீதிகள் பொங்கி மக்கள் தடுமாறுகிற காலத்திலே ஞானவானத்தில் கருணைமுகில் தோன்றி அருள்மழை பொழிந்து, ஆவி சாவியாகாத வண்ணம் உயிராகிய பயிரைக் காப்பாற்றும்.

இந்த முறையில் 19-ஆம் நூற்றுண்டில் ஜாதிவெறி, சமயவெறி முதலிய வெறிகள் மிகுந்து மக்கள் பூசலிட்டு நிலைகுலைந்து நின்றபோது, அருட்பிரகாச வள்ளலார் தோன்றித் திருவருட்பா என்ற தண்டமிழ் மழையைப் பொழிந்து உலகுயிர்களை உய்வித்தார்.

வள்ளலார் சென்னையில் வாழ்ந்தால் தமது தவநிலை குலையும் என்று கருதிச் சிதம்பரம் வந்தார். இன்னும் சிறிது ஒதுங்கி வாழக் கருதி, வடலூராகிய பெருவெளியை அடைந்தார். அங்கும் மக்கள் கூடி அவரை இடர்ப்படுத்தினுர்கள். அங்கிருந்து மேட்டுக்குப்பத்திற்குச் சென்றுர். திருவருளை நாடிக் காட்டிலும் மேட்டிலும் அலைந்தார். அவர் பட்ட பாடு பஞ்சுகூடப் படாது; அத்துணை வருத்தமுற்றுர்; அருள் தாகம் கொண்டு அலைந்தார்; உலைந்தார்; மேனி குலைந்தார்.

**தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்**
**சிறுகுறும் என்றுளம் பயந்தே**
**காட்டிலே சிறிய ஊர்ப்புறங்களிலே**
**நண்ணினேன்.**

சுவாமிகள் தாம் பட்ட பாட்டையும் அடைந்த அல்லலையும் கூறுகிறுர். ஆ! அதனை நினைத்தால் கல்லும் கரையுமே.

**நான்படும் பாடு சிவனே**
**உலகர் நவிலும் பஞ்சு**
**தான்படுமோ ? சொல்லத்தான் படுமோ?**
**எண்ணத்தான் படுமோ ?**
**கான்படு கண்ணியின் மான் படுமாறு**
**கலங்கினின்றேன்**
**ஏன்படு கின்றனை என்றிரங்**
**காயென்னில் என்செய்வனே?**

இவ்வாறு திருவருளை நாடி அடிகளார் வாடினுர்; வருந்தினுர். ‘‘அப்பன் அருள் எங்கே? எப்பொழுது கிடைக்கும்? அந்தோ! நாள் ஒவ்வொன்றுய்க் கழிகின்றதே? என் செய்வேன்?’’ என்று ஏங்கினுர்; அழுதார்; தொழுதார்; அலறினுர்; உளறினுர்.



இப்படி ஒரு நாளன்று, இருநாளன்று, பல நாள் பரிதவித்தார். ஒரு நாள் இரவு, நடு யாமம். எங்கும் நிச்சப்தம். பித்தரும் பத்தரும் முத்தரும் உறங்குகிற அமைதி குடிகொண்டுள்ள நேரம். சராசரங்கள் யாவும் அமைதியாக உறங்குகின்றன.

அந்த நள்ளிரவில் மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகம் என்ற குடிசையில் இராமலிங்க அடிகளார் மட்டும் உறங்காது இரங்கினுர்.

‘‘அம்பலத்தில் ஆடுகின்ற எம்பெருமானே! சிறியேன் படுகிற வேதனையைத் தேவரீர் அறிந்திலீரோ? எங்கும் நிறைந்த இறைவனே! கொசு பறக்கிற ஓசையும் உன் காதில் விழுமே! எனக்கு என்றும் தாயும் தந்தையும் நீர்தாமே? மகனுகிய என்னை இப்படித் தவிக்க விடலாமா? இது நின் கருணைக்கு அழகா? அப்பனே! அருட்கடலே! ஆனந்தக் கூத்தனே! கவலைக் கடல் கடத்தும் அருள் தோணியே! மனத் தளர்ச்சிக்கு ஆணியே! இனி என்னுல் இந்தத் துன்பம் பட முடியாது, பரம கருணைத் தெய்வமே!’’ என்று துதித்தார்.

இவ்வண்ணம் உள்ளம் கனிந்து அழுது தொழுது அங்ஙனமே மண்மேல் வீழ்ந்து மூர்ச்சித்துவிட்டார்.

கனகசபையில் அனவரதமும் ஆனந்தத் தாண்டவம் புரியும் ஆண்டவர் அருள்வடி

வம் கொண்டு வந்தார். உள்ளம் உணர்வு உரை முதலிய எல்லாம் ஒடுங்கி அவச முற்றிருந்த வள்ளலாரை எம்பெருமான் தமது தாமரைத் தடங் கரங்களால் எடுத்தார்; முகத்தைத் துடைத்தார்.

வள்ளலார் கண்விழித்துப் பார்த்தார். ஒளிமயமான ஈசனைக் கண்டார்; களி கொண்டார். ''ஆ! ஆ! ஆண்டவனே! எளியேனையும் ஒரு பெருட்டாக எண்ணி இந்தப் பாதிராத்திரியில் வந்திரே? பரங் கருணைத் தடங் கடலே! அப்பனே! அருள்பெருது அல்லற்பட்டுத் தவிக்கிறேன். தயா நிதியே! ஐயனே! உய்யுமாறு அருள்'' என்று தொழுதார்.

### அருட்பெருஞ்சோதி

உடனே இறைவன் மின்னல் போல் ஓர் ஒளியை உண்டாக்கினர்; அந்த ஒளியே தாமேயானர். அந்தஒளியான அருட்பெருஞ் சோதி வள்ளலார் கண்வழி நுழைந்தார். அவருடைய உடம்பில் புகுந்தார். ஊன் உள்ளம், உணர்வு, உயிர் இவற்றில் கலந்து விட்டார். அந்த அருள் மின்சாரம் பாய்ந்ததும் வள்ளலாருக்கு உண்டான இன்பத்துக்கு எல்லையே கிடையாது. ஊன் குளிர்ந்தது; உள்ளம் குளிர்ந்தது; உணர்வு குளிர்ந்தது; உயிர் குளிர்ந்தது; ஆ ஆ! சொல்ல முடியாத ஆனந்தம்; பரிபூரண இன்பவெள்ளம் பொங்கித் ததும்பி வழிந்தது.

பின்னர் அடிகளார், முன்னையினும் பன்மடங்கு மீறிய துன்பமுற்று அழுதார். ''ஐயனே, ஐயனே'' என்று அலறினர். எம் பெருமான், ''இப்பொழுது நீயும் நானும் ஒன்றுபட்டுக் கலந்து நிற்கின்ருேமே! அருளாரமுதை அள்ளி வழங்கினேனே; இந்தப் பேரின்ப நிலையை வழங்கிய பின், ஏன் அழுகிருய்?'' என்று வினவினர்.

அடிகளார், ''ஆண்டவனே! அருளாரமுதம் எளியேனுக்குக் கிடைக்கவில்லையே என்று முன்னே துன்பமுற்றேன். உமது பேரருளைப் பெற்றபின், முன்னிலும் அதிகம் மனம் துன்புறுகிறது. இத்தகைய இன்பம் மற்ற உயிர்களுக்குக் கிடைக்கவில்லையே? ஆன்மாக்கள் அவமே திரிந்து அலைந்து கெடுகின்றனவே. அந்தோ! இந்த இன்பம் என் போல் எல்லோரும் பெற வேண்டாவோ! பெருமானே! முந்தி என்பொருட்டு அழுதேன். இப்பொழுது உலக உயிர்கள் எல்லோருக்காகவும் அழுகிறேன்'' என்ருர். அவருடைய கருணைதான் என்ன? அப்போது அவர் பாடிய அமுதப் பாடல் இதோ—

**பாதி இரவில் எழுந்தருளிப்**
**பாவியேனை எழுப்பி அருட்**
**சோதி யளித்தென் உள்ளகத்தே**
**சூழ்ந்து கலந்து துலங்குகின்ருய்**
**நீதி நடஞ்செய் பேரின்பநிதி**
**நான் பெற்ற நெடும்பேற்றை**
**ஓதி முடியா தென்போல் இவ்**
**வுலகம் பெறுதல் வேண்டுவனே.**

---

## நடை எத்தனை வகை?

நடை மூன்று வகைப்படும்: கால் நடை, நா நடை, மன நடை என்று. மனிதனை வெறும் கால் நடை என்று பிரிக்காமல் இருப்பவை மன நடையும் நா நடையுமாகும். மன நடை—அதாவது நடத்தை நன்ருக அமைந்தால்தான், நாவொழுக்கம் நன்ருக அமையும். மன ஒழுக்கம் பிறழ்ந்தால், நாவொழுக்கமும் பிறழும். நடத்தையில் மனிதனை உயர்த்துவது மன நடையும் நா நடையும் ஆகும்.

—கிருபானந்த வாரியார்

---





# ஐயப்ப வழிபாடு

ராஜம் ஐயராமன்

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்று தமிழில் ஒரு பழமொழி உண்டு. அதற்கிணங்க, தைமாத முதல் நாளில் கிடைத்தற்கரிய பெரும்பேருன சபரிமலே ஐயப்பனின் மகர ஜோதி தரிசனத்தை ஐயப்ப பக்தர்கள் பெறுகின்றனர்.

இந்த மகர ஜோதி காணும் நாளே ஐயப்பன் திருஅவதாரம் செய்த நாளாகும். அன்று சபரிமலேயின் வடகிழக்குப் பகுதியில் உள்ள பொன்னம்பல மேடு என்னும் இடத்தில் 'தர்ம சாஸ்தா' பிரம்ம சைதன்யமாக ஜோதிரூபத்தில் காட்சி தருகிருர்.

ஐயப்ப வழிபாடு என்பது பாரத நாட்டில் பல பாகங்களிலும் தொன்றுதொட்டு வழக்கில் இருந்தபோதிலும், கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

ஐயப்பனேப் பற்றிய வரலாறு, பதினெட்டுப் புராணங்களில் ஒன்ருன பிரம்மாண்ட புராணத்தில் பூதநாதோபாக்கியானம் என்ற பெயரில் கூறப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் பல இடங்களிலும் ஐயப்பன் கோயில் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

நெல்லே மாவட்டத்தில் சிங்கம்பட்டி மலேயில் ஐயப்பன் கோயில் உள்ளது. இது ஆறு ஆதார ஸ்தானங்களில் ஒன்ருன மூலாதார ஸ்தானம் என்று சொல்லப்படுகிறது.

செங்கோட்டைக்கு அருகிலுள்ள அச்சன் கோயிலில் அரசகோலத்தில் ஐயப்பன் காட்சி தருகிருர். இது சுவாதிஷ்டான ஸ்தானம் என்று சொல்லப்படுகிறது.

ஆரியகாவு என்னும் இடத்திலுள்ள ஐயப்பன் பூரணே, புஷ்கலே என்ற சக்திகளோடு காட்சி தருகிருர். இது மணிபூரக ஸ்தானமாகக் கருதப்படுகிறது. இதற்கு அடுத்த அநாகத ஸ்தானமாகக் கருதப்படும் இடம் கொளத்துப்புழை என்னும் இடத்திலுள்ள ஐயப்பன் கோயில். இங்கே பால ஐயப்பனுக வழிபடப்படுகிருர்.

பந்தளத்திலும் பாலனுகக் காட்சி தரும் ஐயப்பனின் கோயில் விசுத்தி ஸ்தானம் என்று கருதப்படுகிறது.

ஆருவது ஸ்தானம் ஆஞ்ஞை. இது புருவ நடுவில் உள்ள இடம். இதுவே சபரிமலே. இங்கு ஐயப்பன் யோகப் பட்டம் அணிந்து யோகநிலேயில் காட்சி தருகிருர்.

இந்த ஆறு இடங்களிலும், ஆறு ஆதார ஸ்தானமாகப் பரசுராமர் ஐயப்பனேப் பிரதிஷ்டை செய்துள்ளதாகப் புராண வரலாறு கூறுகிறது.

**புராண வரலாறு**

பஸ்மாசுரன் என்ற அசுரன் சிவபெருமானே நோக்கிக் கடுந் தவம் புரிந்து ஓர் அதிசய வரத்தைப் பெற்ருன். அவன் யார் தலேயில் கை வைத்தாலும் அவர்கள் எரிந்து சாம்பலாக வேண்டும் என்பதே அந்த வரம். வரம் தந்த சிவனிடமே அதன் மகிமையைச் சோதித்துப் பார்க்க எண்ணிய அசுரன் சிவனின் தலேயில் கைவைக்க முயன்ருன். இதைக் கண்ட சிவன் அவ்விடத்தை விட்டு மறைந்துவிட்டார்.

இதைக் கண்டு அஞ்சிய தேவர்கள் விஷ்ணுவிடம் சென்று அந்தக் கொடிய அசுரனே அழிக்கும்படி வேண்டினுர்கள். விஷ்ணுவும் மோகினி வடிவம் தாங்கி வந்து, தந்திரமாய் அசுரனே மயக்கி, அவன் கையை அவன் தலேயிலேயே வைத்துக்கொள்ளும்படிசெய்து, அவன் எரிந்து சாம்பலாகச் செய்தார்.

மோகினி உருவில் வந்த விஷ்ணுவைக் கண்டு சிவபெருமான் மயங்க, இரண்டு சக்திகளின் கூட்டுறவால் ஓர் குழந்தை தோன்றியது. இந்தக் குழந்தையைக் கண்டு தேவர்களும் ரிஷிகளும் மனம் மகிழ்ந்து மலர் மாரி பொழிந்தனர். பிரமன் இந்தக் குழந்தைக்குத் தர்ம சாஸ்தா என்று பெயரிட்

டார். சிவன் தன் கழுத்தில் அணிந்திருந்த மணிமாலையை இந்தக் குழந்தையின் கழுத்தில் அணிவித்தார். பிறகு இந்தக் குழந்தையின் அவதார நோக்கத்தைத் தேவரிடம் எடுத்துக் கூறி, ''இந்த குழந்தையே ஐயப்பனுக ஊர்தோறும் விளங்கி அறத்தைப் பாது காப்பான்'' என்று கூறி, இந்தக் குழந்தையைப் பம்பை நதிக்கரையில் விட்டுச் சிவனும் விஷ்ணுவும் மறைந்தனர்.

அது முதல் ஐயப்பன் ஊர்தோறும் ஐயனுர், தர்ம சாஸ்தா, ஆர்யதாதா, ஆரியன், செண்டாயுதன், சாத்தா என்ற பெயர்களில் விளங்கி அருள்புரிந்து வருகிருர்.

**பந்தள நாட்டு இளவரசனுக ஐயப்பன்**

பந்தள நாட்டு மன்னன் ராஜசேகரன் வேட்டையாடச் சென்றபோது, கழுத்தில் மணியுடன் காணப்பட்ட குழந்தையைக் கண்டெடுத்து மிக்க மகிழ்ச்சியுட்ன் அரண்மனேக்கு எடுத்துச் சென்ருன். குழந்தை இல்லாத அரசதம்பதிகள் மணியுடன் கண்டெடுத்த இந்தக் குழந்தைக்கு மணிகண்டன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

சிறிது காலம் சென்று ராணிக்கு ஒரு குழந்தை பிறந்தது. தனது குழந்தையே பட்டத்திற்கு வர வேண்டும் என்று அவள் விரும்பினுள். ஆதலால் மணிகண்டனேப் பட்டத்திற்கு வரவிடாமல் இருக்கச் சூழ்ச்சி செய்ய முற்பட்டனர். அதன்படி ராணிக்கு ஏற்பட்ட தலேவலிக்கு மருந்தாகக் காட்டிற்குச் சென்று புலிப்பால் கொண்டு வரும்படி சிறுவனுன மணிகண்டனே அனுப்பி வைத்தனர்.

**மணிகண்டனின் அவதார வேலே துவங்குகிறது**

தேவி பராசக்தி மகிஷாசுரனே அழித்த பிறகு வெறி கொண்டு அலேந்த மகிஷமுகியை அழிப்பதற்காகவே ஹரியும் ஹரனும் சேர்ந்து தங்களது ஆற்றலிலிருந்து ஹரிஹரனே உருவாக்கினர். ஹரிஹரனுன மணிகண்டன் காட்டிற்குப் புலிப்பால் கொண்டு வரச் சென்றபொழுது, தேவர்கள் மகிஷியை அழிக்கும்படி மணிகண்டனே வேண்டினர். மணிகண்டனும் தேவலோகம் சென்று மகிஷியை அழித்துப் பின்பு பொன்னம்பலமேடு என்னும் இடத்தில் தேவர்களுடனும் முனிவர்களுடனும் வந்து தங்கினுன்.

பிறகு தேவர்களேப் புலிகளாக்கித் தன்னுடன் அழைத்துக்கொண்டு பந்தள நாட்டிற்குச் சென்ருன். மணிகண்டனேப் புலிக் கூட்டத்துடன் கண்ட மன்னன் தன்னிடம் இதுவரை வளர்ந்தவன் பரம்பொருளே என உணர்ந்து மணிகண்டனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். மணிகண்டனும் அவனுக்குத் தான் யார் என்பதை உணர்த்தி, அவனுக்கு ஞான உபதேசம் செய்து, பின் தமது அவதாரத்தில் மற்றுமொரு வேலேயாகச் சபரிக்கு முக்தி கொடுத்தார்.

பிறகு மன்னனின் வேண்டுகோளிற்கு இணங்கி அவனது ராஜ்யத்திலேயே பம்பா நதிக்கரையில் தங்கி அருள்புரிவதாக வாக்களித்து, சபரிமலேயில் கோயில் கொண்டருளினுர்.



**ஐயப்பன் தத்துவ விளக்கம்**

தர்ம சாஸ்தா தேகத்தை வெல்லும் யோகிகளுக்கு உபாசனு மூர்த்தியாகவும், யோக ஐயப்பனுகவும் விளங்குகிருர். சபரிமலே யாத்திரை என்பது ஆன்மிக யாத்திரையேயாகும்.

''எல்லாத் தர்மங்களேயும் விட்டு என்னேயே சரணடை. நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் உன்னே விடுவிக்கிறேன்'' என்று பகவான் கீதையில் கூறுகிருர். ஆனுல் அதே பகவான் தர்மத்தை நிலே நாட்டுவதற்காகச் சிவனுடைய அம்சத்துடன் சேர்ந்து தர்ம சாஸ்தாவாக அவதரிக்கிருர். எல்லாத் தர்மத்தையும் விடும்படி கூறும் பகவான் பின் எந்தத் தர்மத்தை நிலேநிறுத்துவதற்காக அவதாரம் செய்கிருர்?

மனிதனுக்கு உள்ளது ஒரே ஒரு தர்மம் தான். அது ஆத்ம சாட்சாத்காரம் பெறுவதேயாகும். இந்த ஆத்ம சாட்சாத்காரம் அடைவதற்குத்தான் பகவான் என்னையே சரணடை என்று கூறுகிறார். எனவே ஆத்ம சாட்சாத்காரம் என்ற ஒரே தர்மத்தை நிலைநிறுத்துபவனே தர்ம சாஸ்தா ஆகிறான்.

### ஆர்யதாதன்

ஆர்யதாதன் என்பது ஐயப்பன் என மருவி வந்துள்ளது. 'ஆர்ய' என்பதன் திரிபு 'ஐயன்' எனப்படும். 'தாதன்' என்ற சொல்லுக்கு 'அப்பன்' என்று பொருள். எனவே ஐயப்பன் என வழங்கலாயிற்று. மேலும், ஐயன் என்பது திருமாலைக் குறிக்கும் சொல்; அப்பன் என்பது சிவனைக் குறிக்கும் சொல். இவை இரண்டும் சேர்ந்து ஐயப்பன் என வந்துள்ளது. சிவனுடைய ஞானம், தவம் ஆகியவை இணைந்த பிரம்ம அம்சமும், திருமாலுடைய பக்தி, பிரேமை, கிருபை ஆகியவை இணைந்த க்ஷத்திர அம்சமும் இரண்டறக் கலந்த அவதார மூர்த்தியே ஐயப்பன்.



### சிவ-விஷ்ணு அம்சம்

இதைக் குறிக்கும் வகையில் ஐயப்பனுக்கு விஷ்ணுவின் சின்னமான நாமம் அணிவிக்கப்படுகிறது. சிவ சின்னமாக விபூதிப் பிரசாதம் தரப்படுகிறது.

'அபிஷேகப் பிரியன் சிவன், அலங்காரப் பிரியன் விஷ்ணு' என்பதற்கு இணங்க, அபிஷேகச் சிறப்போடு சர்வ அலங்கார பூஷிதனாக ஐயப்பன் காட்சி அளிக்கிறார்.

யோகப் பட்டம் இணைந்த முழங்காலுடன் வலக்கை சின்முத்திரையைக் காட்டியபடி, மற்றொரு கரம் திருவடியைக் காட்டும் கீழ் நோக்கிய நிலையிலும், யோகமூர்த்தியாகக் காட்சி தருகிறார்.

இந்தக் கோலத்திலும் சின்முத்திரை சிவ அம்சமும், அபயகரம் விஷ்ணுவின் அம்சமும் ஆகும்.

### ஆன்மசாதகனுக்கு ஐயப்ப விளக்கம்

தேகத்தை வெல்லும் யோகிகளுக்கு உபாசனமூர்த்தியாக இருந்து ஐயப்பன் உதவி புரிகிறார்.

பூரணை, புஷ்கலை என்பது ஐயப்பனின் இரு சக்திகளாகும். ஆன்மசாதகன் உடற்பற்றை வென்று பிராணஜயம் பெற்றுத் தன்னைப் பிரம்மமாக உணரும்போது பரம யோகியான ஐயப்ப தரிசனம் கிடைக்கிறது.

### யோக பரிபாஷையில்

மதங்கொண்ட யானை—இந்திரியங்கள். குதிரை—பிராணன். ஊர்—தேகம். குதிரை ஓட்டும் சவுக்கு—பிராணனைச் செலுத்தும் சவுக்கு. வெள்ளை யானை—பிரணவ தேகம். பூரணை—தோளுக்கு மேல் உள்ள சந்திர மண்டலத்தில் அறிவாய் விளங்குபவன். புட்கலம்—தேகம். பொன்னம்பல மேடு—புருவநடு.

பிராணன் என்ற குதிரை மீதேறி, தேகமாகிய ஊரைப் பாதுகாப்பவன் ஐயனார். இவனே அக்கினி சொரூபமாய் ஒவ்வொருவரிடமும் உள்ளான். ஜோதிசொரூபமான ஐயன், பிராணன் என்ற குதிரை மீது ஏறி மனதில் பொருந்தித் தேகத்தை நடத்துகிறார். இது ஸ்தூல நிலையில் இயங்கும்போது மனிதன் பந்த பாசங்களில் பொருந்திக் காரிருளில் அழுந்தி கிடக்கிறான். அதே ஐயன் யோக நிலையில் பிராணன் என்ற குதிரையில் தொண்டைக்கு மேல் ஏறிச் சிரசை நோக்கிச் சென்று, பிராணஜயம் பெற்று, சூட்சும நிலையில் இயங்கும்போது புருவ நடுவில் ஒளியாகவும் நாதமாகவும் மாறிப் பிரம்மமயமாகிறான். இதனால் பரிசுத்தமடைந்த இந்திரியங்கள் வெள்ளையானை என்ற பிரணவ தேகத்தைப் பெறுகின்றன. இதை உணர்த்தும் வகையில்

வெள்ளையானைமீது ஐயனார் ஆரோகணித்துச் செல்கிறார்.

எனவே ஆன்மசாதகன் உடலைக் கட்டி, மனதைக் கட்டி, கத்திமுனைப் பாதையில் நடப்பதைப் போல ஆன்மிக யாத்திரை மேற்கொண்டு பிரம்மத்தை அடைவதையே, சபரிமலை யாத்திரையில் ஐயப்பனை அடைவது காட்டுகிறது. அதற்காகத்தான் மண்டல பூஜை என்று நாற்பது நாள் விரதம் இருந்த பிறகு மலைக்குச் செல்கிறார்கள்.

இருமுடி கட்டுதல் என்பது சங்கல்பம், மனவுறுதி ஆகியவற்றைக் குறிக்கிறது. கறுப்புத் துணி அணிவது என்பது நாம் அஞ்ஞான நிலையில் இருப்பதைக் காட்டுவதாகும்.

**பதினெட்டுப் படிகள்**

ஐந்து இந்திரியங்கள்—அன்னமய கோசம். எட்டு ராகங்களும் மூன்று குணங்களும் — பிராணமய, மனோமய கோசங்கள். வித்யா, அவித்யா இவற்றைக் கடப்பது—விஞ்ஞானமய, காரணமய கோசத்தையும் கடப்பது.

எனவே மனிதன் பதினெட்டுத் தத்துவங்களையும் கடந்தால் ஐயப்பனைச் சென்று அடையலாம் என்பதே பொருள்.

கிராமத்தைக் காக்கும் தெய்வமாக ஐயன் இருந்தும், கிராமங்களுக்கு வெளியில் ஐயனார் கோயில் அமைந்துள்ளதற்குக் காரணம்—உலகப் பற்றை விட்ட ஞானிகளுக்கு வேண்டும்போது உலகம் செயற்படுவதும், வேண்டாதபோது உலகை மறந்து பிரம்மத்தில் நிலைத்திருப்பதும் ஆகிய நிலையைக் குறிப்பதாகும்.

எனவே நமது உள்ளத்தில் உறையும் தர்ம சாஸ்தாவைச் சரணமடைந்து சபரிமலை யாத்திரை என்ற ஆன்மிக யாத்திரையை மேற்கொண்டால் ஐயப்ப தரிசனம் கிடைக்கும் என்பது உறுதி. *

---

ஒரு நீதிக் கதை :

# சீனத் துறவியின் தியாகம்



அவர் ஒரு துறவி. அவர் இந்தியாவின் பல இடங்களிலும் மிகவும் அலைந்து திரிந்து சிரமப்பட்டுப் பழங்கால ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்தார்.

அவ்விதம் சேகரித்த ஏட்டுச் சுவடிகளைப் படகில் ஏற்றிக்கொண்டு கங்கை நதியின் அக்கரையிலுள்ள புத்த மடாலயத்திற்குக் கொண்டு சென்றார் அந்தத் துறவி.

நதியின் பாதி தூரத்தில் படகு சென்றுகொண்டிருந்தது. அப்போது ஏட்டுச் சுவடிகளின் பாரம் தாங்காமல் படகு கவிழும் ஆபத்தான நிலை ஏற்பட்டது.

படகோட்டி, ''இரண்டு கட்டு ஏட்டுச் சுவடிகளை எடுத்து நதியில் போட்டு விட்டால் பாரம் குறையும்; படகு மூழ்காது'' என்று துறவியிடம் கூறினான்.

இதைக் கேட்டுத் துறவி அதிர்ச்சியடைந்தார். 'ஆ! எத்தனை எத்தனை சிரமப்பட்டுச் சேகரித்த அறிவுப் பொக்கிஷங்கள்! இவற்றை ஆற்றில் போடுவதா?' என்று அவர் துணுக்குற்றார்.

படகோட்டியிடம், ''வேண்டாமப்பா! பாரம் குறைய நானே படகிலிருந்து இறங்கிவிடுகிறேன். ஏட்டுச் சுவடிகளை மடத்தில் கொண்டுபோய்ப் பத்திரமாகச் சேர்த்துவிடு'' என்று சொல்லிவிட்டு, தமது உயிரையும் பொருட்படுத்தாமல் நடுக் கங்கையில் குதித்துவிட்டார் அந்தத் துறவி.

அவர்தாம் கி. பி. 406-இல் சீன யாத்திரிகராக இந்தியாவிற்கு வந்த பௌத்தத் துறவி பாஹியான்.

—இந்துபூமி

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

மனதை ஒருமுகப்படுத்துவது, தியானம் முதலிய ஆன்மிகப் பயிற்சிகள் விஷயமாக, சுவாமி துரியானந்தர் சொல்வார்:—

'தத்ர ப்ரத்யயைகதாநதா த்யாநம்—எப்போது மனம் ஒரு பொருள் தவிர மற்ற யாவற்றினின்றும் இழுக்கப்பட்டு, அந்த ஒன்றிலேயே நிலைபெறுத்தப்படுகிறதோ, அப்போது அந்தப் பொருளைக் குறித்ததாக ஏற்படும் ஒரே வித எண்ணங்களின் தொடர்ச்சியே தியானம் எனப்படுகிறது.'

மேலும், சுவாமி விவேகானந்தர் கூறுவது போல, 'பிசைந்த மாவு மொத்தை போல எந்த ஒரு பொருளின் மீது மனதை நிலைப்படுத்தினாலும் அது தியானம் எனப்படுகிறது.'

எதுவுமே ஆகாயத்திலிருந்து திடுமெனக் குதித்துவிடாது. ஏன் எல்லோருக்கும் தியான ஆற்றல் இல்லை? ஏனெனில், அதற்குத் தேவைப்படும் நிபந்தனையை, அதாவது முழு அளவில் அமைய வேண்டிய புலனடக்கத்தை, அவர்கள் பூர்த்தி செய்வதில்லை. இந்தப் புலனடக்கம்தான் ஓஜஸ் (பலம்) எனப்படுவது. இந்தப் பலத்தில் குறைபாடு உள்ளவனிடம் நீ எதை எதிர்பார்க்க முடியும்? விவரமாக, சுருக்கமாக எப்படிச் சொன்னாலும், ஒருத்தனுக்குப் பூரணமாகத் தன்னை அடக்கிக்கொள்ளும் ஆற்றல் இருக்க வேண்டும். தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளாதவனுக்கு யோகம் இயலாது என்பது என் கருத்து. ஆனால், 'தன் புலன்களைக் கட்டுப்படுத்திய ஒருவன் முயற்சி செய்து அதற்கான சாதனை முறைகளைப் பின்பற்றினால் அதை (யோகசித்தியை) எய்தலாம்' என்று கீதை கூறுகிறது.

மக்கள் தங்கள் மனம் போனபடி தோன்றுகிறவற்றைப் பின்பற்றுகிறார்கள்; ஆகையால் நற்பலனை அடையத் தவறுகிறார்கள். சாஸ்திரங்கள் இருக்கவே செய்கின்றன; ஆனால் அவர்கள் அவற்றைப் பார்க்க மறுக்கிறார்கள். குரு சொல்வதையும் கேட்க மாட்டேன் என்கிறார்கள். முடிவில் அவர்கள் யோகத்துக்குத் தகுதி அற்றவர்களாக ஆகிறார்கள்.

உணவு விஷயங்களிலும், காரிய முயற்சிகளிலும், உறக்கம்—விழிப்புக்களிலும் மிதமாக இருக்கிற ஒருவனுக்கு யோகம் கைகூடி, எல்லாத் துன்பங்களையும் துடைக்கிறது.



ஒருவனுக்கு ஏதேனும் பிணி இருந்தால் அது நாளடைவில் மறைந்துவிடும். ஆனால் ஒருவன் தனது ஆன்மிகப் பயிற்சிகளை விடாமல் பின்பற்ற வேண்டும்.

* * *

**சுவாமி துரியானந்தர் (பாடுகிறார்):**

'அன்னையே! அனைத்தும் உன் சங்கற்பத்தைச் சார்ந்ததே. உன் விருப்பம் எப்படியோ அப்படியே நீ செயற்படுகிறாய்.' இப்போது சிறிது காலமாக எனக்கு இந்தக் கருத்து மிகவும் பிடித்திருக்கிறது. நாட்கள் செல்லச் செல்ல, இந்தக் கருத்தின் கவர்ச்சி

மேன்மேலும் எனக்கு அதிகமாகிறது. நன்மை தீமை இரண்டும் நீயே. உன் சங்கற்பத்தாலேயே இவை இரண்டும் நிகழ்கின்றன.

'ஆண்டவன் எவரை உயர்த்த எண்ணுகிருனே அவர்களால் நற்செயல் நிகழச் செய்கிருன்; எவரைத் தாழ்த்த எண்ணுகிருனே அவர்களைக் கொண்டு தீய செயல் நிகழ்விக்கிருன். 'நொண்டி மலைகளை ஏறச் செய்வதும் நீயே. யானையைப் புதைசேற்றில் அழுந்தச் செய்வதும் நீயே.'

மனம் என்பது–பரிதாபப்பட வேண்டிய வஸ்து—அதைப் பழி சொல்லிப் பயனில்லை. 'காளி என்னும் செப்பிடுவித்தைக்காரியின் மகள்தான் அதை அவள் இஷ்டப்படி ஆட வைப்பவள்.' இந்த யாவற்றுக்கும் பின்னுல், இவை அனைத்துக்கும் வழிகாட்டுவதாக ஒரு சக்தி உள்ளது என்று நினைப்பதிலேயே ஓர் ஆறுதல் இருக்கிறது. ஆனுல் பகுத்தறிவாளர்கள் இந்த அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். 'காரணமில்லாமல் ஒரு விளைவு உண்டாக முடியுமா என்ன?' என்று அவர்கள் கேட்பார்கள். இதற்கு மறு தரப்பினர் கூறும் மறுமொழி: 'அவன்தான் (இறைவன்தான்) எல்லாக் காரணங்களுக்கும் காரணம்.'

முன்பெல்லாம் நான்கூடத்தான் இதை ஒப்புக்கொள்ளாமல், குறிப்பாக சுவாமி அத்புதானந்தருடன் இந்த விஷயமாகக் காரசாரமாக விவாதித்திருக்கிறேன். 'ஆண்டவன் தன் எண்ணப்படியே செய்கிருனென்ருல் அவன் சர்வாதிகாரியாகிவிடுகிருன். ருஷ்யாவின் ஜார் மன்னன் போன்ற ஒரு யதேச்சாதிகாரியா அவன்? அவன் நீதிமான், தயை மிக்கவன், கருணுகரன்' என்பேன். அதற்கு மறுமொழியாக அவர், 'பேஷ்! எந்த மாசும் அற்றவன் என்பதாக உம் கடவுளை நீர் இப்படிப் பாதுகாப்பது நன்ருகத்தானிருக்கிறது, பிரமாதமாக இருக்கிறது!' என்பார். எத்தனை அருமையான பதில்! அவர் பகுத்தறிவுக்கு அதீதமான கோணத்திலிருந்து பேசினுர். ஆனுல், பகுத்தறிவாளரின் கோணத்தில் இது மிகவும் பாதகமான விமரிசனத்துக்கு இடம் தருகிறது. இது ஜீவனின் சங்கற்ப சுதந்திரத்தின் வேரையே பறிப்பதாக இருக்கிறது. ஒருவனுக்கு வெறும் கொள்கை அளவான அறிவே உள்ளபோது (அதாவது அனுபவ பூர்வமான தெய்விக அறிவு ஏற்படாத போது), இந்தக் கோணம் ஆபத்தானது தான். இந்தக் கோணத்தை மேற்கொள்ள ஒருவன் உண்மையிலேயே தகுதி பெறும் போது அவன் தவருன நடவடிக்கை எதுவும் எடுக்கவே மாட்டான்.

பால்யத்தில் நான் ஒரு பொம்மலாட்டம் பார்த்தேன். அதிலே ஒரு பொம்மை கூப்பாடு போட்டபோது, அந்தப் பொம்மை தானுகவே சத்தம் போடுகிறது என்றே நினைத்தேன். அது நகருவதும் தானே சகஜமாகச் செய்வது போலத் தோன்றிற்று. ஆனுல் 'பிற்பாடு ஒருவன் திரைகளுக்குப் பின்னிருந்து கயிறுகளை இழுப்பதைக் கண்ட போது என் பிரமை விலகியது.

இப்போது சில காலமாக மகாமாயா சித்தாந்தம், அதாவது அனைத்தையும் ஒரு விச்வாகார சக்தி இயக்கிக்கொண்டிருக்கிறது என்ற சித்தாந்தம், என்னை வெகுவாகக் கவர்ந்திருக்கிறது. எனக்கு அது எவ்வளவு பிடித்திருக்கிறது என்பதை உங்களுக்குப் புரிய வைப்பதற்கான வார்த்தைகள் என்னிடம் இல்லை. இது எதனுலென்ருல் மனமானது இதிலுள்ள உண்மையை ஏற்றுக் கொண்டுவிட்டது. (அதாவது பகுத்தறிவு ரீதியில் புரிந்துகொள்ளத் தேவையில்லாமல், இதன் சத்தியம் உள்ளத்துக்குப் புரிபட்டு விட்டது.) சுவாமிஜியும் (விவேகானந்தர்) தமது வாழ்வின் கடைசிக் காலங்களில் மகாமாயையிடம் மகத்தான விசுவாசம் வைக்கலானுர்.

மகாமாயையான அவளுடைய கையில் தனக்கெனச் செயலற்ற கருவி மாத்திரமாக இருப்பதென்பது பேச்சில்தான் வருமே தவிரக் காரியத்தில் வராது. அவளிடம் நாம் சரண் செய்துவிட்டால் அவள் ஒரு நாளும் நம்மைக் காப்பாற்றுவதிலிருந்து தவறமாட்டாள். வயது ஏறி வரும்போது ஒரு கட்டம் வரும்; அப்போது காரண காரிய சித்தாந்தத்தைச் சார்ந்திருப்பதை விட்டு, நாம் இயற்கையாகவே அம்பிகை வசம் நம்மை ஒப்படைத்துக்கொண்டு விலகி நிற்போம்.

*




# தெய்வம் ஒன்றே

ஸ்ரீநிவாசன்

'அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு' என்று சொல்லுவார்கள். சிவன், விஷ்ணு இருவருக்கிடையே எந்தப் பேதமும் இல்லை; இருவரும் ஒருவரே என்பதுதான் அதன் அர்த்தம். இந்த உண்மையை ஒரு பக்தருக்கு உணர்த்திப் பரமன் அவரை ஆட்கொண்ட கதைதான் இது.

பண்டரிபுரத்தில் நரஹரி என்ற பொற்கொல்லர் வாழ்ந்து வந்தார். இவர் தீவிரமான சிவபக்தர். பண்டரிபுரமோ விஷ்ணு ஸ்தலம். எனவே நரஹரி வரவேற்று உபசரிப்பதற்குச் சிவனடியார்கள் அந்த ஊரில் இல்லை. அவர் பார்க்க வேண்டியதோ பாண்டுரங்கனை. கேட்க வேண்டியதோ 'ஹரி விட்டல' நாமாவளி. இதனால் எரிச்சலுற்ற அவர் செவிகளைப் பொத்திக்கொள்வார். கோவிலைச் சுற்றி வளைத்துச் செல்வார். மறந்தும் அவர் பாண்டுரங்கன் கோவிலுக்குள் நுழையமாட்டார்.

பாண்டுரங்கனின் வணிக பக்தன் ஒருவன் தன் பிரார்த்தனை பலித்தற்காகப் பாண்டுரங்கனுக்கு நவரத்தினங்கள் இழைத்த தங்க அரைஞாண் காணிக்கை செலுத்த விரும்பினான். அதற்காக அவன் பொற்கொல்லராகிய நரஹரியைத் தேடி வந்தான். நரஹரியோ, "பாண்டுரங்க விக்கிரகத்தின் அளவு கொண்டு வந்து கொடுத்தால் அரைஞாண் செய்து தருகிறேன்" என்று சொல்லிவிட்டார். வணிகனான அந்தப் பக்தன் நரஹரியின் விஷ்ணு துவேஷத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டான். முடிவில் அவன் கோவிலுக்குச் சென்று தானே பாண்டுரங்க விக்கிரகத்தின் அளவெடுத்துக்கொண்டு வந்து நரஹரியிடம் கொடுத்தான்.

அதன்படி நரஹரியும் மிகவும் அருமையான ஓர் அரைஞாணைச் செய்து கொடுத்தார். வணிகன் அதை மகிழ்ச்சியுடன் வாங்கிச் சென்று கோவிலில் கொடுத்தான். விக்கிரகத்தில் அதைப் பூட்டினால் அது ஆறு விரற்கடை அளவு குறைந்தது. ஆதலால் வணிகன் மீண்டும் அரைஞாணை நரஹரியிடம் கொண்டு வந்து கொடுத்து, அதைப் பெரிதாக்கித் தரச் சொன்னான். நரஹரி வணிகன் இரண்டாம் முறை கொண்டு வந்து கொடுத்த அளவின்படியே அரைஞாணைப் பெரிதாகச் செய்து கொடுத்தார். வணிகன் அதைக் கோவிலில் கொண்டுபோய்க் கொடுத்தபோதோ விக்கிரகத்திற்கு இப்போது அது அளவில் பெரியதாக இருந்தது.

வணிகனுக்கு ஒரே வருத்தம். 'இது என்ன சோதனை?' என்று அவன் கலங்கினான். நரஹரியைக் கெஞ்சினான். "நீங்களே வந்து விக்கிரகத்தின் அரைஞாணுக்கு அளவெடுங்கள். அப்போதுதான் சரியாக வரும்" என்று வேண்டினான்.

அதற்கு நரஹரி முதலில் ஒப்புக்கொள்ளவில்லை. முடிவில் அந்தப் பக்தன் மிகவும் வற்புறுத்தியதனால் ஒரு நிபந்தனையுடன் ஒப்புக்கொண்டார்.

அதாவது, 'என் கண்களைத் துணியால் கட்டி மறைத்துக்கொண்டுதான் கோவிலுக்கு வருவேன்' என்ற நிபந்தனையை விதித்தார், வணிகன் அந்த நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டு அவ்விதமே நரஹரியைக் கோவிலுக்கு அழைத்துச் சென்றான்.

வணிகன் நரஹரியைப் பாண்டுரங்கனின் விக்கிரகத்தின் முன்னால் கொண்டு போய் நிறுத்தினான். துணியால் தம் கண்களைக் கட்டியிருந்த நரஹரி விரல்களால் பாண்டுரங்கனின் இடுப்பைத் தடவினார். என்ன ஆச்சரியம்! புலித்தோலை இடுப்பில் கட்டியிருந்தார் பெருமான். நரஹரி சந்தேகத்துடன் பகவானின் மற்ற அங்கங்களைத் தடவ, அங்கே உடுக்கை, மான், திரிசூலம், சடைமுடி என்று சிவபெருமானுக்கே உரிய அனைத்தும் இருந்தன.

நரஹரி, 'அடடா! நம் சிவபெருமான் அல்லவா இங்கே இருக்கிறான்!' என்று நினைத்து, தம் கண்களைக் கட்டியிருந்த துணியை அவிழ்த்தார். கண் திறந்து பார்த்தார். அவர் எதிரே சங்கு சக்கரத்துடன் பீதாம்பரதாரியாய்ப் பண்டரிநாதன் நின்றான். நரஹரி திடுக்கிட்டு உடனே தம் கண்களை மூடிக் கொண்டார். அவர் மறுபடி தடவிப் பார்த்தால் முன்போலவே சிவபெருமானின் சின்னங்கள் அவரது கைகளில் தட்டுப்பட்டன.

இறைவன் திருவருளால் நரஹரியின் அகக் கண் திறந்தது. கண்களைத் திறந்தால் பண்டரிநாதனாகவும், கண்களை மூடினால் சிவனாகவும் இறைவன் காட்சி தந்ததிலிருந்து இருவரும் ஒருவரே என்று நரஹரி தெளிவாக உணர்ந்தார், அது காரணமாக அவர் தெய்விகப் பரவசம் பொங்க இறைவன் திருமுன் கீழே விழுந்து வணங்கி அழுதார்.

தம்மை மன்னிக்கும்படி வேண்டிய நரஹரியின் முன்னால் பாண்டுரங்கன் புன்சிரிப்புடன் தோன்றி, ''மக்கள் அறியாமையினால் சிவ—விஷ்ணு பேதம் சொல்லித் தங்களுக்குள் சண்டை போடுகிறார்கள். வழிபடுகிறவர்கள் விரும்பியபடி பரம்பொருள் காட்சி தருகிறான். இறைவன் ஒருவனே'' என்று சொல்லி மறைந்தான்.

நரஹரி மனம் திருந்தினார். *

---

# இது செய்யலாமே!



'வசதியுள்ளவர்களால்தான் பண உதவி செய்து புண்ணியம் செய்ய முடியும். நாம் என்ன செய்யலாம்?' என்று மற்றவர்கள் எண்ணக்கூடாது. சரீரத்தால் மற்றவர்களுக்குக் கைங்கரியம் செய்வது பெரிய புண்ணியம். ஒவ்வொருவரும்—பிறருக்குக்கூடத் தெரிய வேண்டாம்—ஏதோ ஓர் ஒற்றையடிப் பாதைக்குப் போய் அங்கே உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால் போதும். அது சித்தசுத்திக்குப் பெரிய உதவி.

—காஞ்சிப் பெரியவர்

* * *

நம் அன்றாட வாழ்க்கையில் கழியும் ஒவ்வொரு கணமும் சாதாரணமானதாகத் தோன்றினாலும் உண்மையில் அது அத்தகையது அல்ல. அதில் பெரிய பொருள் பொதிந்திருக்கிறது. வாழ்க்கை முழுவதும் ஒரு பெரிய வேள்வியாகும். இது ஆண்டவனுடையது என்ற உணர்ச்சியுடன் ஒரு சாதாரணக் காரியம் செய்தபோதிலும் அது புனிதமாகிவிடுகிறது.

—வினோபா பாவே

# அன்பு மிக்கவர் யார்?

கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமான் தன் வாம பாகத்தில் அன்னையை வைத்திருக்கிறான். மாதிருக்கும் பாதியனாகிய அவனோடு பிரிவின்றி ஒட்டி இணைந்திருக்கிறாள் அன்னை. அவள் இமாசல அரசனின் மகள்; நல்ல குலத்தில் உதித்த மங்கை. அவளைத் தேவரும் பிறரும் அறிய இறைவன் திருமணம் செய்துகொண்டான்.

**அவள் ஓர் குலமங்கை;**
**பாகத்து அகலாள்.**

அந்தப் பெருமான் தன் தலையில் கங்கா தேவியை வைத்திருக்கிறான். எப்போதும் அவனுடைய சடாபாரத்தில் தங்கியிருக்கும் பெருமாட்டி அவள். ஜலமங்கையாகிய இவளும் அவன் சடையிலிருந்து பிரியாமல் தங்கியிருக்கிறாள்.

**இவள் ஓர் சலமகளும் ஈதே.**

பாகத்தில் ஒருத்தியையும் தலையில் ஒருத்தியையும் தாங்கிக்கொண்ட சிவபெருமானுக்கு அந்த இருவரும் மனைவிமார்கள். உமாதரனாகிய அவன் கங்காதரனுமாக இருக்கிறான்.

கங்கையை இறைவனுடைய மனைவியாகச் சொல்வது மரபு.

**"கங்கை யாளோ வாய்திறவாள்**
**கணபதியோ வயிறுதாரி**
**அங்கை வேலோன் முருகன் பிள்ளை"**

என்று இந்தக் குடும்பத்தைப் பற்றிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடுவார்.

இவ்வாறு இரண்டு பெண்டாட்டிக்காரனாக இருக்கும் சிவபெருமானைப் பார்த்துக் காரைக்காலம்மையார் ஒரு கேள்வி கேட்கிறார். இறைவனை நெருங்கி அன்பு செய்பவராதலின் அவனிடம் பல கேள்விகளைக் கேட்கும் உரிமை பெற்றவர் அவர். அவர் எழுப்பும் பல வகை வினாக்களை நாம் பார்த்து வருகிறோம்.

இறைவனையே நேரில் விளித்து இந்த வினாவை எழுப்புகிறார் அம்மையார். ''வெள்ளை வெளேர் என்றிருக்கும் திருநீற்றையும் எலும்பையும் அணியும் பெருமானே!'' என்று இறைவனை அழைக்கிறார்.

**தவளநீறு என்பு அணிவீர்!**

''இந்த இரண்டு தேவிமாரையும் என்றும் பிரியாமல் வைத்திருக்கிறீர் நீர். அவர்களை விட்டு நீர் ஒருகாலும் பிரிந்ததில்லை.''

**என்றும் பிரிந்து அறியீர்.**

எப்போதாவது இருவரையும் விட்டுப் பிரிந்து இருந்ததில்லை. சிறிது நேரம் கங்கையை விட்டுவிட்டு உமாதேவியுடன் மட்டும் இருக்கலாம் என்று எண்ணிப் பிரிந்ததில்லை. அப்படியே உமாதேவியை விட்டுக் கங்கையுடன் சில காலம் இருக்கலாம் என்று எண்ணியும் இருந்ததில்லை. எந்தக் காலத்திலும் அவர்களினின்றும் பிரிந்து நின்றதில்லை.



இரண்டு பெண்டாட்டிக்காரர்களில் பெரும்பாலோருக்கு இரண்டாம் தாரத்தின் மேல் அதிகக் காதல் இருக்கும். சிலருக்கு மூத்த மனைவியிடத்தில் விருப்பம் இருக்கும். இரண்டு பெண்டாட்டிகளையும் பிரியாமல் வாழும் இறைவனுக்கு மலைமங்கை சலமங்கை ஆகிய அந்த இருவர்களுள் யாரிடத்தில் அதிக அன்பு இருக்கும்? இப்படி ஓர் எண்ணம் தோன்றியது அம்மையாருக்கு. யாரைக் கேட்பது? அந்த மங்கையரைக் கேட்டால் ஒவ்வொருவரும் தம்மிடந்தான் இறைவன் நெருங்கி அன்பு செய்கிறவன் என்று சொல்லக்கூடும். அவ்வாறு பட்சபாதமின்றி அன்பு செய்கிறவன் அவன். ஆனாலும் அவனுடைய திருவுள்ளத்தில் யாரேனும் ஒருவரிடம் மிகுதியான அன்பு இருக்குமோ? இந்த ஐயத்தை எப்படித் தீர்த்துக் கொள்வது? இறைவனையே கேட்டுவிடலாம் என்று அம்மையாருக்குத் தோன்றுகிறது.

''எம்பெருமானே, இந்த இரண்டு பேர்களுக்குள் உன்னுடைய அன்புக்கு நெருக்கமானவர்கள் யார்?'' என்று அவனையே நோக்கிக் கேட்கிறார்.

**ஈங்கு இவருள்**
**அன்பு அணியார் சொல்லுமின்**
**இங்கு ஆர் ?**

இறைவன் அவர்களுக்குக் கொடுத்திருக்கும் இடத்தைப் பார்த்தால் இரண்டு பேருமே சிறந்தவர்களாகத் தோன்றுகின்றனர். உடம்பிலே ஒரு பாதியையே ஒருத்திக்கு வழங்கினன் என்றால் அவர்களுடைய நெருக்கத்தைச் சொல்ல வேண்டியதில்லை. ஆனல் மற்றொருத்தியைத் தலையாலே தாங்குகிறான். அன்புள்ளவர்களை ஆதரித்து ஒட்டியுறவாடுவதை, ''தலையினாலே தாங்குகிறான்'' என்று சொல்வது உலக வழக்கு. அப்படிப் பார்த்தால் தலையாலே தாங்கும் சலமகளாகிய கங்கைக்கு இறைவன் இரண்டாந்தரமான இடத்தைக் கொடுத்திருக்கிறான் என்று சொல்ல முடியாது. உடம்புக்குள் உத்தம அங்கமாக இருப்பது தலை. அந்த உத்தமமான இடத்தையே கங்கைக்கு அளித்திருக்கிறான். அவ்வாறானால் அவளிடத்தில் உள்ள அன்பு அவ்வளவு உயர்ந்ததன்று என்று சொல்ல முடியுமோ?



இறைவன் திருவுள்ளத்தை உணர முடிந்தால் யாரிடம் அவன் அதிக அன்பு பாலிக்கிறான் என்று சொல்ல முடியும். அவன் திருவுள்ளத்தை அறிந்து கொள்ளும் ஆற்றல் யாருக்கு இருக்கிறது?

ஆகவே, அவனையே கேட்டுவிடுவோம் என்று துணிந்து, இந்த வினாவை விடுக்கிறார் அம்மையார்.

**அவள் ஓர் குலமங்கை,**
**பாகத்து அகலாள்;**
**இவள் ஓர் சலமகளும்**
**ஈதே; - தவளநீறு**
**என்பு அணிவீர், என்றும்**
**பிரிந்து அறியீர்; ஈங்கு இவருள்**
**அன்பு அணியார் சொல்லுமின்; இங்கு ஆர்?**

வெண்மையான திருநீற்றையும் எலும்பையும் அணியும் பெருமானே! அங்கே இருக்கும் ஒப்பற்ற அவள் நல்ல குலத்தில் தோன்றிய மங்கையாகிய பார்வதி; இங்கே இருக்கும் இந்த நீர் வடிவத்திலுள்ள கங்கா தேவியும் இந்தத் திருமுடியில் இருக்கிறாள். இந்த இரண்டு தேவிமாரையும் நீர் என்றும் பிரிந்தறிய மாட்டீர். இவ்வாறு உம்மோடு ஒட்டி நிற்கும் இந்த இரு தேவியர்களுக்குள் உம்முடைய அன்புக்கு அணிமையை உடைய நெருக்கமானவர் யார்? இதை யானாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. நீரே சொல்லும்.

[அவள் என்றது பார்வதியை. பாகத்து அகலாள் என்பதனால் அச்சொல் அம்பிகையைக் குறித்தது என்பது தெரியவரும். இவள் என்றது கங்கையை. ஓர் என்றது எண்ணைக் குறித்து நின்றது. உலகத்தவரும் காண ஆறாக ஓடுதலின் இவள் என்று அணிமைச் சுட்டினால் குறித்தார். ஈதே என்பது நின் திருமுடியாகிய இடத்தில் இருப்பவள் என்ற பொருள் உடையது. சலமகளும்—சலமகளின் நிலையும். ஈது-இந்தத் திருமுடியில் இடங்கொள்வது என்று பொருள் கொள்ள வேண்டும். ஈங்கு—இவ்வாறுள்ள. அன்பு அணியார்—அன்புக்கு அணிமையாக இருப்பவர்; அண்ணியார் என்பது அணியார் என்று இடைக்குறை. அன்பை அணிகலமாகக் கொண்டவர் என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு—இவ்விடத்தில். அன்பணியார் ஆர், சொல்லுமின் என்று கூட்டி முடிக்க.]

இறைவனோடு உரிமையுடன் உரையாடும் இயல்புள்ளவராதலின் இவ்வாறு கேட்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 95-ஆவது பாட்டு இது.

*




## கற்பின் உயர்வு

'நம்பி'

உபகீசகர்களை வதம் செய்த பின்பு, பீமன் பின்வரும் கதையைத் திரௌபதிக்குச் சொன்னான்:—

திரௌபதி! கேள். முன்பொரு காலத்தில் தேவராதன் என்பவனுக்கு அன்புள்ள மனைவி இருந்தாள். அவள் பெயர் சிரோமணி; கற்புநெறி பிறழாதவள். சிரோமணியின் அழகைப்பற்றிக் கேள்வியுற்ற அரக்கன் ஒருவன் ஒரு சமயம் அவளை, அவளது கணவன் போல வடிவம் எடுத்துக்கொண்டு வந்து அபகரித்துப் போய்விட்டான். அவ்வாறு அபகரித்துப் போன அந்த அரக்கன் சிரோமணியை ஒரு குளக்கரையில் இறக்கி வைத்துவிட்டுத் தன் சுய வடிவத்தை எடுத்துக்கொண்டு பல வழிகளிலும் அவளைப் பலவந்தப்படுத்தினான்.

கற்புக்கரசியான சிரோமணி அரக்கனுக்கு இணங்காமல் தன் கற்பைக் காக்கத் தனது சக்தி அனைத்தையும் திரட்டிப் போராடிக் கொண்டிருந்தாள். அதனால் கோபம் கொண்ட அரக்கன் கத்தியை எடுத்துக்கொண்டு சிரோமணியைப் பயமுறுத்தினான். அரக்கனின் மிரட்டலுக்குச் சிரோமணி அஞ்சவில்லை.

சிரோமணிக்கு உதவத் துடிப்பது போல் குளத்தில் மீன்கள் துள்ளிக்கொண்டிருந்தன.

வானமும் குமுறிக்கொண்டிருந்தது.

மனித நடமாட்டம் இல்லாத அந்த இடத்தில் கற்புக்கரசி சிரோமணி தன்னந்தனியாக அரக்கனோடு போராடிக்கொண்டிருந்தாள். அபலை சிரோமணியின் உடல் சோர்ந்துவிடத் துவங்கியது.

தருமத்திற்குச் சோதனை ஏற்படும் காலத்தில் குமுறுகிற நல்லோர் நெஞ்சம் போல் குமுறிக்கொண்டிருந்த வானத்தை அவள் நிமிர்ந்து பார்த்தாள். பார்க்கும் இடம் தோறும் நீக்கமற நிறைந்திருக்கும் வானமே பரமனின் வடிவமாக அவளுக்குத் தோன்றியது. வானத்தை நோக்கி இரு கரங்களையும் குவித்துக் கண்களில் நீர் மல்கச் சிரோமணி அரற்றினாள்: ''நான் உண்மையில் பதிவிரதையாயின், எனது நடத்தையால் சான்றோர் மகிழ்ச்சி அடைந்திருப்பீர்களாயின், எனது உடலில் தலை நீங்கலாக மற்றப் பகுதி முழுவதும் கல்லாக மாறட்டும்!'' என்று சொன்னாள்.

சிரோமணி இவ்வாறு சபதம் எடுத்துக் கொண்டதும், அவளது உடலில் தலை நீங்கலான இதர அவயவம் அனைத்தும் கல்லாக மாறிவிட்டது.

தனது விருப்பம் நிறைவேறாததைக் கண்ட அரக்கன் சிரோமணியின் தலையை வாள்வீச்சினால் துண்டித்துவிட்டான்.

இதன் விளைவாக, பூலோக வாழ்வு முடிந்த சிரோமணி வானவர் மலர் தூவத் தேவலோகம் சென்றாள். ஜகன்மாதாவான பார்வதிதேவிக்கு நகமும் சதையும் போல் நெருங்கிய தோழியாகும் பேறு பெற்றாள்.

''பெண்ணே! கற்புள்ள மாதருக்குத் துக்கம் குறைவு; முடிவில் சுகம் அதிகம் என்பதைத் தெரிந்துகொள்'' என்று சமாதானம் சொல்லி, திரௌபதியை நகருக்கு அனுப்பி வைத்தான் பீமன்.

—மகாபாரதம், விராட பருவம்

# இந்தியத் தத்துவஞானம்

## வல்லபாசாரியரது சித்தாந்தம்

ஆத்திரேய சுந்தரநாராயணன்

### வரலாறு

இந்திய வரலாற்றில் இடைக்காலத்தில் அந்நியர் படையெழுச்சியினுலும் ஆதிக்கத்தினுலும் வட இந்தியாவில் இந்து மதத்திற்கு ஆபத்து ஏற்பட்டது. அப்போது நிம்பார்க்கர், ஜயதேவர், ராமானந்தர், சைதன்யர் முதலிய பக்த சிரோமணிகள் தோன்றி, ராமானுஜரின் பக்தி மார்க்கத்தைப் பரப்பி, இந்து மதத்திற்குப் புத்துயிர் அளித்தனர்.

இந்தப் பக்தர்களில் வல்லபரும் ஒருவர். 1479-ஆம் ஆண்டில் மத்தியப் பிரதேசத்தைச் சார்ந்த சம்பாரண்யத்தில் வத்ரப் என்ற ஊரில் வல்லபர் பிறந்தார். லக்ஷ்மணபட்டர் என்ற இவரது தந்தை தெலுங்குப் பிராம்மணர். இவரது முன்னேர் நூறு சோமயாகம் செய்த தீக்ஷிதர்கள்.



11 வயது நிரம்புவதற்குள் வல்லபர் நான்கு வேதங்களையும், நியாயம் முதலிய ஆறு சாத்திரங்களையும், 18 புராணங்களையும் கற்றது செயற்கரிய செயலே.

இவரது பன்னிரண்டாவது வயதில் தந்தை காலமானவுடன், இவர் தென்னிந்திய யாத்திரையை மேற்கொண்டார். விஜயநகரத்தில் கிருஷ்ணதேவராயர் இவரது சாத்திரப் புலமையை அறிந்து இவருக்கு 'ஆசாரியார்' என்ற விருதை அளித்தார்.

பிரயாகை அருகில் அடெல் என்ற ஊரில் தங்கி இவர் சித்தாந்தப் பிரசாரம் செய்து கொண்டிருக்கையில் யாத்திரையாக வந்த கிருஷ்ண சைதன்யரை இவர் அழைத்துச் சென்று அவருடன் கிருஷ்ணப் பிரேமையில் வெகு நேரம் ஆழ்ந்தார். இறுதியில் 1531-இல் காசியில் சந்நியாச ஆசிரமம் வரித்து, சீடர்களுக்கு அறிவுரை வழங்கி விட்டு மறைந்தார்.

### சம்பிரதாயம்

பிரம்ம சூத்திரம், ஜைமினி சூத்திரம், பாகவதம் ஆகியவற்றிற்கு வல்லபர் உரை இயற்றினர். ஆனல் அவற்றில் ஒரு பகுதியே கிடைத்துள்ளது. இவரது மற்ற நூல்கள் தத்துவதீப நிகண்டு, ஸித்தாந்த ரஹஸ்யம், புஷ்டி மார்க்கம், நவரத்தினம், பக்தி வர்த்தினி, ஸுபோதினி முதலியன. இவரது குமாரர் விட்டலநாதரும், பேரர் கோகுல்நாத்தும் இவரது சித்தாந்தத்தைக் குஜராத்திலும் ராஜஸ்தானிலும் பரப்பி, அநேக ஜைனர்களை வைணவராக்கினர். செல்வம் செழித்த வியாபாரிகளும் சீடர்களாயினர். வல்லபரின் வம்சத்தினருக்கு கோஸ்வாமிகள் என்று பெயர்.

ராஜஸ்தானில் உதயபூருக்கு 50 கி.மீ. தூரத்தில் உள்ள நாதத்வாரா என்ற கிருஷ்ணன் கோவிலை இவர்கள் நிர்வகிக்கின்றனர். இந்த விக்கிரகம் வடமதுரையில் ஒரு குன்றின் அருகில் கண்டுபிடிக்கப் பட்டு, வல்லபரால் கொண்டு வரப்பட்டுக் கோவில் கட்டப்பட்டது. இதற்கு வரும் வருமானம், திருப்பதிக்கு அடுத்து உள்ளது.

**தத்துவம்**

மாயை, அத்யாஸம் இல்லாமல் அத்வைதத்தை விளக்கலாம் என்று வல்லபர் கூறி, தமது சித்தாந்தத்திற்கு, 'சுத்தஅத்வைதம்' என்று பெயரிட்டார்.

'பிரம்மம் ஒன்றே உள்ளது; மாயைக்கு இருப்பும் அன்று, இன்மையும் அன்று; அது விளக்க முடியாதது' என்று ஆதிசங்கரர் கூறினலும், வல்லபர் மாயையை மற்றொரு பொருளாகவே கருதி, 'சங்கரரின் அத்வைதம் சுத்தம் இல்லை' என்றார்.

வல்லபரது சித்தாந்தம் 'அவிக்ருத ப்ரஹ்மவாதம்' எனப்படும். பிரம்மமே ஜீவர்களாகவும் பிரபஞ்சமாகவும் ஆயிற்று எனவும், இதற்கு ஆதாரம் ஈசாவாஸ்ய உபநிடதத்தில் சாந்திபாடத்தில் உள்ளது என்றும் வல்லபர் கூறுகிறார்—

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ணம் உதச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணம் ஆதாய
பூர்ணம் ஏவாவசிஷ்யதே ॥

அது (பிரம்மம்) பூர்ணம். இதுவும் (பிரபஞ்சமும்) பூர்ணம். பூர்ணத்தினின்றும் பூர்ணத்தை எடுத்ததும் எஞ்சியுள்ளதும் பூர்ணமே.

'பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமும், உபாதான காரணமும் பிரம்மமே. காரணமும் காரியமும் ஒன்றே' என்றார் வல்லபர். இதைச் சங்கரர் ஒப்புக்கொண்டாலும், 'மாயையினல் காரணம் காரியமாகத் தோன்றுகிறது' என்றார்.

பிரம்மத்திற்கு 'ஸத்' என்ற நிலையான இருப்பு, 'சித்' என்ற ஞானம், அனந்தமான ஆனந்தம், ரஸம் (உணர்ச்சி) இவை உண்டு என்று தைத்திரிய உபநிடதத்தில் கூறப்பட்டுள்ளது. 'மேலும், கிரியா சக்தியும் கல்யாண குணங்களும் அதற்கு உண்டு' என்று வல்லபர் கூறுகிறார்.

கிருஷ்ணன் என்ற பெயரே ஸத்-சித்-ஆனந்தம் உடையவன் என்ற பொருள் பெறும். பிரம்மம் நிர்க்குணமானது என்பது சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய பிரகிருதி குணங்கள் இல்லாமையே.

பிரம்மம் உயிரற்ற ஞானம் என்ற குணமாக இல்லாமல், சேதனமான (உயிருள்ள) சூக்ஷ்ம வடிவம் கொண்டது. பிரளய காலத்தில் சூக்ஷ்ம வடிவில் பிரபஞ்சம் பிரம்மத்தில் சேர்ந்துவிடுகிறது.

பிரம்மமே புருஷோத்தமன். இவன் அக்ஷரம், காலம், கர்மம், ஸ்வபாவம் என்ற வடிவுகளில் தோன்றுகிறுன். இது 'அவிக்ருத பரிணுமம்' எனப்படும்.

காரண வடிவில் அவ்யக்தமாக (தோன்றாத நிலையில்) உள்ள அக்ஷரப் பிரம்மம் காரிய வடிவில் வியக்தமாக ஜீவர்களாகவும் பிரபஞ்சமாகவும் தோன்றுகிறது. அக்ஷரப் பிரம்மத்திலிருந்து 'ஸத்' பிரபஞ்சமாகவும், 'சித்' தீயிலிருந்து தீப்பொறி போன்று ஜீவர்களாகவும் தோன்றின என்று முண்டக உபநிடதம் கூறுகிறது.



ஜீவன் பிரம்மத்தின் அம்சம் என்று கீதை கூறுகிறது.

பிரம்மத்தின் ஸத், சித், ஆனந்தம், கல்யாண குணங்கள் ஓரளவு தோன்றாத நிலையில் ஜீவனுக்கு உண்டு.

ஜீவன் நித்தியமானது; அணுப் போன்றது; பிறப்பதில்லை, இறப்பதில்லை. ஒளியை அறை முழுவதும் விளக்குப் பரப்புவது போன்று, ஜீவன் சைதன்யத்தால் (ஞானத்தால்) உடலின் ஒவ்வொரு பகுதியையும் அனுபவிக்கிறது. அறிவதும், செய்வதும், அனுபவிப்பதும் அதுவே.

குழந்தைப் பருவத்தில் காணுமற்போய்க் காட்டில் வேடர்களிடத்தில் வாழ்ந்த அரசகுமாரன் வளர்ந்த பின்பு, தன் பிறப்பை அறிந்து, அரசன் ஆனுன். சிறு குட்டியாக இருந்து ஆடுகளிடையில் வாழ்ந்த புலி,

வளர்ந்த பின்பு தன் பிறப்பை அறிந்து வீரியம் பெற்றது. அது போன்று ஒவ்வொரு ஜீவனும் தான் பிரம்மத்தின் அம்சம் என்று அறிந்து, நல்ல நடத்தையால் தெய்வத்தன்மையை வெளிப்படுத்துவது தலையாய கடமை.

பிரம்மத்தின் அம்சமான ஜீவன் உடல், மனம் போன்ற உபாதைகளால் 'நான், எனது' என்ற அஞ்ஞான வலையில் சிக்கி, அதனின்று முக்திசாதனங்களால் பிறப்பு இறப்பு வட்டத்தினின்று விடுபட்டு, அக்ஷரப் பிரம்மத்தைச் சூட்சும வடிவில் சேருகிறது. அங்கே புருஷோத்தமனுக்குப் பணி செய்து அவனது ஆனந்தத்தில் ஈடுபடுகிறது என்கிறார் வல்லபர்.

அக்ஷரம் என்பதும் பிரம்மமே என்று கீதை கூறுகிறது. 'அக்ஷரம் என்பது பிரம்மத்தின் இருப்பிடம் அல்லது உடல்' என்று ஸுபால உபநிடதமும் தைத்திரீயமும் கூறுகின்றன.

பிறப்பு இறப்புச் சூழலிலிருந்து விடுபட, கர்மயோகம், ஞானயோகம் என்ற மரியாதை மார்க்கங்களைப் பின்பற்றுவது கலிகாலத்தில் கடினமானது; இவை சாத்திரம் கற்றவர்களுக்கே சாத்தியம்; எனவே, பாமரர்களும் பெண்களும் கீழ்நிலை ஜாதியினரும் அனுட்டிக்கக் கூடிய 'புஷ்டி மார்க்கம்' என்ற பக்தி மார்க்கத்தை வல்லபர் உருவாக்கினார்.

புஷ்டி என்றால் பகவானின் அருள்; இது பக்தியினால் கிடைப்பது.

புஷ்டி மார்க்கத்தை அனுஷ்டிக்க, முதலில் ஒருவன் தன் குருவினிடம் சென்று பிரம்ம ஸம்பந்தம் என்ற சடங்கைச் செய்விக்கக் கோர வேண்டும். ஸம்பந்தம் என்றால், நல்ல கட்டு—இறை உறவு என்று பொருள். அவனது கையில் துளசியைக் கொடுத்து, கிருஷ்ண விக்கிரகத்திற்கு முன் இட்டுச் சென்று அவர் ஒரு மந்திரத்தைக் கூறச் சொல்லுவார். இது தென்னிந்திய வைணவர் செய்யும் ஸமாச்ரயணம் என்ற ஆத்ம நிவேதனம் போன்றதே.

பிரம்ம சம்பந்தம் செய்துகொண்டவனுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்கள் வேண்டும். 1. சங்கு சக்கர இலச்சினைகளைத் தோளில் கோபி சந்தனத்தால் இடுதல் வேண்டும். 2. தினமும் கிருஷ்ண ஆராதனை செய்ய வேண்டும். 3. 'ஶ்ரீக்ருஷ்ண: சரணம் மம' என்ற அஷ்டாக்ஷர ஜபம்செய்ய வேண்டும். 4. ஊர்த்துவ புண்ட்ரம் — உயரே நோக்கிச் செல்லும் திலகம்—தென்னாட்டு வடகலை வைணவர் வெள்ளைத் திருமண்ணால் அணிவதைச் சிவப்புக் குங்குமத்தால் அணிய வேண்டும். 5. தன் பெயருக்குப் பின் 'தாஸ்' என்று சேர்த்துக்கொள்ள வேண்டும்.

பகவானது திருவடிகளின் சின்னமாக நெற்றியில் திலகம் அணிவதனால் பகவானது சிந்தனை எப்போதும் இருக்கும். தாஸன் என்று பெயருடன் சொல்லிக்கொள்வதனால், இறைவனுக்கு அடிமை என்ற எண்ணம் மேலோங்கி நிற்கும். கிருஷ்ண அஷ்டாக்ஷரம் ஜபிப்பதனால் ஆதிபௌதிகம், ஆத்



யாத்மிகம், ஆதிதைவிகம் என்கிற உடல் நோயாலும், மனதாலும், பழைய கர்மத்தாலும் ஏற்படும் துயர்கள், கதிரவனுக்கு முன்னுள்ள பனி போல் நீங்கும்; சகல சௌபாக்கியங்களும் கிட்டும்; அறியாத பாவங்களைப் பொசுக்கி, முக்தி நிலையும் அளிக்கும்.

பிரம்ம சம்பந்தம் என்ற சடங்கிற்குப் பின் ஒருவன் தன்னுடையதாக நினைப்பதை எல்லாம் இறைவனுடையதாக எண்ண வேண்டும். தன் சொத்து, குழந்தைகளையும் பகவானுக்கு அர்ப்பிக்க வேண்டும். ஆகார சுத்தம் வேண்டும்.

'ஆகாரம் சுத்தமானால் மனம் போன்ற அந்தக்கரணம் சுத்தமாகிறது. அந்தக்கரணம் சுத்தமானால் கடவுள் நினைவு நிலை பெறும். பின்பு எல்லாக் கட்டுகளும் தளர்ந்து போகும்' என்று சாந்தோக்கிய

உபநிடதம் கூறுகிறது. பகவானுக்கு நிவேதனம் செய்த உணவையே உட்கொள்ள வேண்டும்.

எந்தப் புதிய பொருளை வாங்கினாலும் முதலில் பகவானுக்கு அதை அர்ப்பணம் செய்து, பிறகு பிரசாதமாகப் பெற்று, நல்ல காரியத்திற்குப் பயன்படுத்த வேண்டும்.

கோபிகளைப் போல் கிருஷ்ணனிடம் பிரேமையைச் செலுத்த வேண்டும்; ஆனால் ராதையைப் போல் மதுரபாவம் வேண்டியதில்லை. பெரியவர்களைச் சந்திக்கும்போது 'ஜய கிருஷ்ண' என்று கூறி மரியாதை செலுத்த வேண்டும். புலன்களை அடக்கி, நித்திய நைமித்திக கர்மங்களை ஆற்றுதல் வேண்டும். உடலாலும் பொருளாலும் மனதாலும் பகவத் சேவையும் தானமும் செய்தல் வேண்டும்.

மேலும், கீதையில் 12-ஆம் அத்தியாயத்தில் கூறியபடி, பக்தன் அச்சம், சினம், மகிழ்வு, ஆசை, வெறுப்பு ஆகியவற்றை நீக்கி, ஸமதர்சனம், சிந்தனைத் தெளிவு, மனஉறுதி, அடக்கம், பொறுமை, பணிவு, திருப்தி, இனிய சொல் ஆகியவற்றைப் பெற்று, மனம், புத்தி, கர்மத்தின் பயன் இவற்றை இறைவனுக்கு அர்ப்பணம் செய்வான். பஜனை, பாகவதம் கேட்டல், எளியவர்க்கு உதவி செய்தல் ஆகியவற்றால் பக்தி பெருகி, அது இங்கேயே ஜீவன்முக்தி பெற வழி வகுக்கும். அம்ருதம் இஹ பவதி.

பாஞ்சராத்திரத்தில் உள்ள நான்கு வியூகங்களை வல்லபர் ஏற்கிறார். பகவான் வாசுதேவனாகப் பாற்கடலில் பள்ளிகொண்டு யோக நித்திரையில் ஆழ்ந்து இருக்கும் போது பக்தர்களின் அபயக் குரலைக் கேட்டால் உதவ விரைகிறார். அவர் ஸங்கர்ஷணனாக ஞானம் பலம் என்ற குணங்களுடன் ஸம்ஹாரத்தைச் செய்கிறார்; ஐசுவரியம் வீர்யம் என்ற குணங்களுடன் பிரத்யும்னனாக இருந்து சிருஷ்டியைச் செய்கிறார்; அநிருத்தனாக இருந்து சக்தி, தேஜஸ் என்ற குணங்களுடன் ஜீவர்களுக்கு உதவுகிறார்.

வல்லபர் பக்தியை நான்கு வகைப் படுத்துகிறார். ஒருவனைக் கெடுக்கும் நோக்கத்துடன் பகவானுக்குப் பூஜை செய்தல் தாமஸ பக்தி. ஓர் ஆசையை நிறைவேற்றப் பூஜை செய்வது ராஜஸ பக்தி. எதற்கும் ஆசைப்படாமல் பக்தி செலுத்துவது சாத்துவிக பக்தி. இதயத்தில் உள்ள பகவானிடம் தியானம் செய்து பிரேமை செலுத்துவது நிர்க்குண பக்தி.

**ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தரின் 121-ஆவது ஜயந்தி விழா, 1983 ஜனவரி 5-ஆம் நாள் புதன்கிழமை வழக்கம் போல் விமரிசையாகச் சென்னை, ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும். ஜனவரி 9-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை விவேகானந்த ஜயந்தி விழாப் பொதுக்கூட்டம் நடைபெறும்.**

வல்லபர் இரண்டு தடவை தென்னிந்திய யாத்திரை செய்தபோது ஸ்ரீரங்கத்தில் ராமானுஜ சித்தாந்தத்தைக் கற்றுக் கொண்டார். மேலே கூறிய விவரங்களிலிருந்து இவரது சித்தாந்தமும் விசிஷ்டாத்வைதமே. 'உடல் உள்ள அளவும் விருப்பு வெறுப்பு நீங்கா' என்று ப்ருஹதாரண்யக உபநிடதம் கூறுவதனால், இந்தப் பிறப்பிலே ஜீவன்முக்தி பெற முடியாது என்பது ராமானுஜரின் கருத்து. வல்லபர் ஜீவன் முக்தியில் நம்பிக்கை வைப்பதனாலும், அவரது சித்தாந்தம் ருத்ர ஆசாரியார், விஷ்ணுஸ்வாமி இவர்களின் சித்தாந்தத்தைப் பின்பற்றுவதனாலும் இதை 'ருத்ர வைணவம்' என்கின்றனர்.

''வல்லபர், சைதன்யர் முதலிய வைணவ பக்தர்கள் ராமானுஜ சித்தாந்தத்தையே சிறிது மாற்றித் தங்கள் சம்பிரதாயங்களை அமைத்துக் கொண்டனர்'' என்று சுவாமி விவேகானந்தரும் குறிப்பிட்டிருக்கிறார்.

*

# அருள்நெறிக் கதை

## எதற்கு மாளிகை?

நாடோடி

**வைராக்கியத்தை நம் உள்ளத்தில் தோற்றுவிக்க எழுந்த நல்ல ஒரு கதை இது.**

தேவராஜனான இந்திரன் ஒரு தடவை தேவசிற்பியான விச்வகர்மாவைக் கூப்பிட்டு, பதினான்கு உலகங்களிலும் அதை விடச் சிறந்த மாளிகை கிடையாது என்று சொல்லும்படி அத்தனை பெரியதும், அத்தனை அழகியதுமான மாளிகை ஒன்று கட்ட வேண்டுமென்று உத்தரவிட்டான்.

விச்வகர்மா தன் உதவியாட்களை வைத்துக்கொண்டு மிகப் பெரிய மாளிகையைக் கட்ட ஆரம்பித்தான்.

மிகப் பெரிய மாளிகையாகவும் இருக்க வேண்டும்; அதே சமயம் மிக அழகிய மாளிகையாகவும் இருக்க வேண்டும் என்று இந்திரன் விரும்பியதனால் பல தேவ வருஷங்கள் ஆகியும் விச்வகர்மாவினால் மாளிகையைக் கட்டி முடிக்க முடியவில்லை. ஆதலால் விச்வகர்மாவும் அவனுடைய உதவியாட்களும் களைத்துப் போய்விட்டார்கள்.

இந்திரனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. என்ன செய்யலாம் என்று அவன் திகைத்திருந்தபோது அங்கே நாரத முனிவர் வந்து சேர்ந்தார்.

நாரதரைக் கண்டதும் அவருக்குத் தன் மாளிகையைக் காட்ட வேண்டுமென்று இந்திரனுக்கு ஆசை உண்டாயிற்று. அதைச் சுற்றிக் காண்பித்துவிட்டு, ''நீங்கள் பதினான்கு உலகங்களிலும் சஞ்சாரம் செய்கிறீர்களே. இத்தனை பெரிய மாளிகையை எங்காவது கண்டதுண்டா?'' என்று கேட்டான்.

அதற்கு நாரதர், ''நான் பார்த்ததில்லை. ஆனால் மகரிஷி லோமசர் சிரஞ்சீவி. அவர் பார்த்திருக்கிறாரோ என்னவோ!'' என்றார்.

அந்தச் சமயத்தில் மகரிஷி லோமசரும் அங்கு வந்து சேர்ந்தார். அவருக்கு உடம்பெல்லாம் ரோமங்கள் இருந்ததனால் லோமசர் என்று பெயர். இடுப்பில் கௌபீனம், தலையில் சின்னப் பாய், அவ்வளவுதான் அவருடைய ஆஸ்தி.

இந்திரன் அவரைப் பார்த்து, ''எதற்காகப் பாயைத் தலைமேல் விரித்தாற்போல வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு லோமசர், ''இந்த உடலோ அநித்தியம். இந்த அநித்தியமான உடலைக் காப்பதற்காக அதற்கென்று ஒரு வீடு கட்டிக்கொள்வானேன்? இந்த உடலை வெப்பத்திலிருந்தும் மழையிலிருந்தும் காப்பாற்ற இந்தச் சின்னப் பாய் போதாதா?'' என்று கேட்டார்.

இந்தப் பதிலைக் கேட்டு இந்திரன் ஆச்சரியப்பட்டான்.

''சிரஞ்சீவியாகிய தாங்களா தங்கள் உடலை அநித்தியம் என்கிறீர்கள்?''

''சிரஞ்சீவியாக இருந்தாலும் என் உடலும் ஒரு நாள் போக வேண்டியதுதான். என் உடலிலுள்ள அத்தனை ரோமங்களும் உதிர்ந்ததும் இந்த உடல் அழிந்துவிடும். இதோ பார், என் மார்புப் பாகத்தை. ஒரு காசளவு ரோமம் உதிர்ந்துவிட்டது. அத்தனைக்கும் என் ரோமங்கள் உதிர்வதற்கு வெகு காலம் ஆகிறது என்று நினைக்க வேண்டாம். ஒவ்வொரு பிரம்மா மறையும்போதும் என் உடலிலிருந்து ஓர் உரோமம் கீழே உதிர்கிறது. உனக்குத்தான் பிரம்மாவின் ஆயுட்காலம் எவ்வளவு சிறியது என்பது தெரியுமே! பதினாறு இந்திரர்களின் ஆயுட்காலம் பிரம்மாவுக்கு ஒரு நாள்; அப்படி 365 நாள் ஆனால் பிரம்மாவுக்கு ஒரு வருஷம்; அப்படி நூறு வருஷங்கள் ஆனால் ஒரு பிரம்மாவின் ஆயுள். அவ்வளவுதானே! இந்த அற்ப காலத்திற்காகவா என்னைச் சிரமப்பட்டு வீடு கட்டிக்கொள்ளச் சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

மகரிஷி லோமசரின் ஆயுட்காலத்தோடு ஒப்பிடும்போது தன் ஆயுட்காலம் எவ்வளவு சிறியது என்பதை இந்திரன் எண்ணிப் பார்த்தான். உடனே அந்தப் பெரிய மாளிகையின் வேலையை நிறுத்தும்படி கட்டளையிட்டான்.

*

# வேதாந்தச் சிந்தனை

## அஷ்டாவக்கிர கீதை

*'ஹரிணி'*

அஷ்டாவக்கிர முனிவர் பின்வரும் அருள் மொழிகளை ஜனக மன்னனுக்கு உபதேசித்தார்—

அரசே! எப்போது மனம் ஏதாவது ஒன்றை விரும்புகிறதோ, எதற்காகவாவது வருந்துகிறதோ அதுவே பந்தம் ஆகும். எப்போது மனம் ஏதோ ஒன்றை ஏற்பதும் தள்ளுவதுமாக மகிழ்வதும் கோபத்தினல் சிறுவதுமாக இருக்கிறதோ, அதுவும் பந்தமே என்று அறிந்து கொள்வாயாக. எப்போது மனம் எதையும் விரும்பாமல், எதற்காகவும் வருந்தாமல் இருக்கிறதோ அதுவே முக்தி ஆகும்.

எப்போது மனம் மகிழ்ச்சியோ கோபமோ இல்லாமல், எதையும் விரும்பி ஏற்காமலும், வேண்டாமென்று விலக்காமலும் இருக்கிறதோ அதுவே முக்தி என்று அறிந்துகொள்வாயாக.

நான் என்ற எண்ணம் அறவே நீங்கும் போதே விடுதலை என்ற முக்தி சித்திக்கும். நான் என்ற நினைவு உதித்தவுடனேயே நீ கட்டுப்பட்டவனுக அதாவது பந்தத்திற்கு உட்பட்டவனுக ஆகிவிடுகிருய். ஆகவே நீ சிறிது சிறிதாக 'நான்' என்பதை ஒழித்து, எதையும் தள்ளாமலும் கொள்ளாமலும் ஆத்மாவில் நிலைபெற்று இருப்பாயாக.

அன்பனே! இதுவரை செய்தது, செய்யாமற்போனது முதலியவற்றிலிருந்தும் மற்றும் பல இரட்டைகளிலிருந்தும் எவனுக்குத்தான் ஓய்வு கிடைத்திருக்கிறது? இந்த உண்மையை நன்ருகச் சிந்தனை செய்து, உலகில் எல்லாவற்றையும் துறந்து, தியாகசீலனுக, ஆசையற்றவனுக, உதாசீனனுக இருந்து வருவாயாக.

குழந்தாய்! இறைவனின் திருவருள் பெற்று எவனே ஒரு புண்ணியசாலி மட்டுமே இந்த உலகின் இயல்பை உள்ளது உள்ளபடி உணர்கிருன். அவனது வாழ்க்கையில் ஆசையும், சுகபோகங்களில் விருப்பமும், தெரிந்துகொள்வதில் இருக்கும் ஆர்வமும் அடங்கப்பெற்றவனுக இருக்கிருன்.

மேலும், இவை எல்லாமே நிலையில்லாதவை, மூன்று வகைத் தாபங்களால் களங்கமுற்றவை, சாரமில்லாதவை, இகழ்ந்து விலக்கத்தக்கவை என்று அறிந்த ஞானியே சாந்தமாக இருக்கிருன்.

எங்கே மனிதர்கள் துவந்தம் எனப்பெறும் இரட்டைகளிலிருந்து விடுபட்டிருக்கிருர்களோ அங்கே காலமும் வயதும் ஏது? இரட்டைகளை முழுவதும் புறக்கணித்து எது எவ்விதம் வந்துள்ளதோ அவ்விதமே இருப்பவன் எவனே அவனே பூர்ணத்துவம் எய்தியவன் அதாவது உன்னத நிலையை அடைந்தவன் ஆவான்.

எவர் உதாசீனம் அதாவது உலகப் பொருளில் அசிரத்தை, சமத்துவம், விவேகம் எனப்படும் யுக்திகளால் ஆத்ம ஸ்வரூபானுபவத்தை உணரச் செய்து, உலகச் சுழலிலிருந்து நம்மைக் காத்து அருள் புரிகிருரோ அவரே சிறந்த குரு அல்லவா?

பஞ்சபூதங்களின் மாற்றத்தைப் பஞ்சபூதங்களாக மட்டுமே காண்பாயானுல், அந்தக் கணமே நீ கட்டுகளிலிருந்து விடுபட்டு ஆத்மசொரூபத்தில் நிலைபெற்றுச் சுகம் பெறுவாய்.

ஆகவே, ஆசைகளே சம்சாரம், உலகம், பிறப்பு, இறப்பு என்று உணர்ந்து அவை எல்லாவற்றையும் விட்டுவிடு. 'ஆசைகளின் நீக்கமே உண்மையான துறவு' என்பதை நன்ருக அறிந்து, இப்போது உள்ளபடியே ஆன்மசொரூபத்தில் நிலைபெற்றுச் சுகம் பெறுவாயாக.

தீமை விளைவிக்கும் உலகப் பொருள்களையும் ஆசை என்ற பகைவனையும்—இந்த இரண்டிற்கும் காரணமாக இருக்கும்

தர்மத்தையும் விட்டுவிட்டு, எல்லாவற்றிலும் உதாசீனத்தைக் கடைப்பிடிப்பாயாக.

உற்ருர் உறவினர், நண்பர் செல்வம், வீடு, மனைவி, பூமி முதலிய எல்லாச் செல்வங்களும் நாலைந்து நாட்களின் வாழ்வு மட்டுமே. இவற்றை ஒரு கனவு போலவும், இந்திரஜாலக் காட்சியைப் போலவும் பார்க்கத் தெரிந்துகொள்.

எங்கே ஆசை இருக்கிறதோ அங்கே சம்சாரம் என்ற உலகம் இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள். ஆகவே திட வைராக்கியத்தைக் கடைப்பிடித்து ஆசையற்றவனுகச் சுகமாக இரு.

அன்பனே! ஆசைகளே பந்தம். ஆசைகளின் நீக்கமே மோட்சம். இந்த உலகப் பற்றுக்களை அடியோடு ஒழித்த மாத்திரத்திலேயே நீடித்த ஆன்மசுகம் என்ற பேரின்பத்தைப் பெறுவாய். ஒவ்வொரு பிறவியிலும் ராஜ்யம், மனைவி, மக்கள், உடல் ஆகியவற்ருல் அனுபவித்த எல்லாச் சுகங்களும், நீ ஆர்வத்துடனும் பற்றுதலுடனும் இருந்தபோதிலும் அழிந்து போய்விட்டனவே!

அன்புமகனே! போதும்; எண்ணற்ற பிறவிகளில் நீ அனுபவித்த இந்த அறம் பொருள் இன்பம் ஆகியவை எல்லாம் போதும். இந்த வறண்ட உலகம் என்ற கானகத்தில் ஒருபோதும் உன் மனதிற்கு ஓய்வு என்பதே கிட்டாது.

நீ இதுவரை எத்தனை எத்தனை பிறவிகளில் உடலாலும் மனதாலும் வாக்காலும் கஷ்டத்தை அடைந்து சிரமப்படவில்லை? நன்ருகச் சிந்தனை செய்: இந்த உலகக் கர்மங்கள் எல்லாமே களைப்பையும் துன்பத்தையும் விளைவிக்கக் கூடியனவாகவே அமைந்துள்ளன. ஆதலால் நீ இப்போதாவது அவற்றை நிறுத்திவிட்டு ஓய்வு பெறுவாயாக.

லௌகிக நினைவுகளே துக்கங்களுக்குக் காரணம். ஆன்மசொரூபத்தில் நிலைபெற்றவனே சாந்தியும் சுகமும் பெறுவான்.

உலகில் காணப்படுபவை அனைத்தும் மாற்றமும் அழியக்கூடிய இயல்பும் கொண்டவையே என்பதை அறிந்துகொள். இவையெல்லாம் தம் இயல்பிற்கு ஏற்பவே நிகழ்கின்றன என்பதை நன்கு அறிந்தவன் ஒரு போதும் துயரமோ கலவரமோ அடையமாட்டான். அவன் எப்போதும் சுகமாகவும் அமைதியாகவும் இருப்பான்.

எல்லாம் இறைவன் செயல், அவனைத் தவிர வேறு எவருமில்லை-இந்த உண்மையை நன்ருக அறிந்தவன் ஆசை அனைத்தும் நீங்கப்பெற்று மனம் அடங்கியவனுக, சாந்தமாக இருப்பான். பற்றற்றவனுக இருப்பதனுல் அவன் எப்போதும் சுகமாக, அமைதியாக இருப்பான்.

இன்பம் துன்பம் எதுவாயினும் அனைத்தும் இறைவன் செயலே-இந்த உண்மையை நன்ருக அறிந்தவன் புலன்களை அடக்கி மனநிறைவுடன் துயரற்று இருப்பான். எதையுமே விரும்பாத அவன் ' சுகமாக, அமைதியாக இருப்பான்.

பிறப்பும் இறப்பும் ஆபத்தும் செல்வமும்கூட முன்வினைப் பயனுகவே வருகின்றன. இந்த உண்மையை நன்கு அறிந்தவன் சென்றதை நினைத்துக் கவலைப்பட மாட்டான். மேலும், அவன் எந்தச் செயலைச் செய்தபோதிலும் அதில் பற்று வைக்கவே மாட்டான்.

துக்கத்திற்குக் காரணம் கவலையே; மற்ற எதனுலும் துன்பம் உண்டாவதில்லை—இந்த உண்மையை நன்ருக அறிந்தவன் கவலையற்று, ஆசையற்று, சுகமாக, சாந்தமாக இருப்பான்.

நான் இந்த உடல் அல்ல, இந்த உடல் என்னுடையதல்ல, நான் சுத்த ஞான சொரூபமே என்பதை நன்கு அறிந்தவன் பூரணநிலையைப் பெற்று என்றும் விடுபட்டவனுக (முக்தனுக) இருந்து வருவான். அவன் தான் செய்யாமல் விட்ட செயல்களை நினைத்துக் கவலையுறமாட்டான், தான் செய்தவைபற்றிச் சிந்திக்க மாட்டான்.

பலப் பல விநோதங்கள் நிறைந்த இந்த உலகம் என்பது ஒன்றுமே இல்லை என்பதை நன்கு அறிந்தவன் எப்போதும் ஆன்மாவில் நிலைபெற்றுப் பேருணர்வுமயமாக, அவா அற்றவனுக, அமைதியே வடிவெடுத்தவனுகத் திகழ்வான்.

*

# ஆன்மிக வினா-விடை

சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி: கோவிலுக்குச் சென்றால் மூன்று தடவை பிரதட்சணம் வரவேண்டும் என்கிறார்கள். அதற்கு என்ன காரணம்?**

**பதில்:** கோவிலுக்குச் செல்லும் நாம் சொல், செயல், சிந்தனை மூன்றினாலும் இறைவனிடம் நம்மை ஒப்படைக்க வேண்டும். இந்தக் கருத்தில் அமைந்த ஒரு வழக்கத்தையொட்டியே ஆலய வழிபாட்டில் மூன்று தடவை பிரதட்சிணம் செய்கிறோம்.

**கேள்வி: அர்த்தவாதம் என்றால் என்ன?**

**பதில்:** ஒருவரிடம் காரியத்தைச் சாதித்துக்கொள்ள அவரைப் புகழ்வது அர்த்தம் இல்லாமலே இருந்தாலும், ஓர் அர்த்தம் அல்லது பொருளை நாடிச் செய்வதனால் அந்தப் புகழ்ச்சிகள் அர்த்தவாதம் ஆகும்.

மத நூல்களில் பலச்ருதியில் உள்ள உயர்வுநவிற்சி அதில் பக்தி ஏற்படுவதற்காக இருப்பதால் அதுவும் அர்த்தவாதம் எனப்படும்.

அர்த்தவாதத்தில் மிகைப்படுத்திச் சொல்லப்படும் கருத்துக்கள் முற்றிலும் உண்மையாக இரா. அவை பக்தி ஏற்பட வேண்டும் என்ற ரீதியில் அமைந்த ஏதோ ஒரு நோக்கத்துடன் மத நூல்களில் சொல்லப்பட்டவை ஆகும்.

**கேள்வி: லலிதா ஸஹஸ்ரநாமத்தைப் பலச்ருதியுடன்தான் படிக்க வேண்டுமா? நான் பலச்ருதியைப் படிப்பதில்லை. எனவே என் சந்தேகத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.**

**பதில்:** லலிதா ஸஹஸ்ரநாமம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் எல்லாம் பலச்ருதி இல்லாமலும் படிக்கலாம். பலச்ருதி எல்லாம் அர்த்தவாதம். அதில் பக்தியைப் புகட்டுவதற்காகச் சொல்லப்பட்டவை.

ஆன்மிக வினுவிடைப் பகுதிக்கு உரிய கேள்விகளை எழுதி அனுப்புங்கள். ஒருவரே எத்தனை கேள்விகள் வேண்டுமானாலும் எழுதி அனுப்பலாம்.

இந்தப் பகுதிக்குப் பலரும் கேள்வி எழுதி அனுப்பியுள்ளார்கள். அவற்றில் பத்திரிகையின் தரத்திற்கு ஏற்புடைய கேள்விகள் மட்டுமே பிரசுரிக்கப் பெறும்.

**கேள்வி: உத்தம வைஷ்ணவனுக்கு உரிய இலக்கணங்கள் யாவை? உத்தம சைவனுக்கு உரிய இலக்கணங்கள் யாவை?**

**பதில்:** கடந்த ஆண்டு விஜயம் மே இதழில் வெளிவந்த 'வைஷ்ணவ ஜனதோ' கட்டுரை உத்தம வைஷ்ணவனுக்கு உரிய இலக்கணங்களைச் சுருக்கமாகத் தெரிவிக்கிறது. 'பகவான் விரும்பும் பக்தன்' என்ற தலைப்பில் விஜயம் மணிவிழா மலரிலும் உத்தம பக்தனின் குணநலன்களை விளக்கி ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. அவற்றில் சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்களே சிவபரமாக அமையும்போது அவையே உத்தமசைவனுக்கு உரிய இலக்கணமாகவும் அமையும்.

ஜபம், சரணுகதி, பரோபகாரம், திருமுறைகளைப் பயிலுதல், நல்லொழுக்கம் போன்ற வகையில் அமையும் அனைத்தும் இருவருக்கும் பொதுவானவை.

ஜீவன்முக்தன், ஸ்திதபிரஜ்ஞன், தெய்விக சம்பத், பிராம்மணத்துவம், சான்றோர் என்பனவற்றுக்குத் தரப்படும் விளக்கங்கள் அனைத்தும் உத்தம வைஷ்ணவனுக்கும் உத்தம சைவனுக்கும் பொருந்துவனவாகவே இருக்கும்.

இன்னும் சரியாகச் சொல்லப் போனுல் உத்தம சைவன், உத்தம வைஷ்ணவன், உத்தம சாக்தன் உத்தமக் கிறிஸ்தவன், உத்தம இஸ்லாமியன் போன்றவர்களிடையே புறத்தளவிலேதான் வேறுபாடு இருக்குமே தவிர, மனப் பரிபாகத்தில் ஒரே மாதிரியாகத்தான் இருப்பார்கள்.

கூடிய விரைவில் 'யார் வைஷ்ணவன்?', 'யார் சைவன்?' என்ற தலைப்புக்களில் விஜயத்தில் தனித் தனிக் கட்டுரைகளை வெளியிட முயல்கிறேன். அவற்றில் தங்கள் வினுவிற்கு உரிய விடை விளக்கமாக இடம் பெறும்.

**கேள்வி: 'நீரார் நிழல்' என்று கூறப்படுகிறதே, அதன் பொருள் என்ன?**

**பதில்:** நீருக்கு நிழல் உண்டு என்பது தர்க்க சாஸ்திர முடிவு. நிழலின்றேல் வெளி இல்லை. வெளி இன்றேல் நீரில் உயிர்கள் வாழ முடியாது. ஆதலால் நீரிலிருந்து அந்த நிழல் தனித்து வேருக நில்லாமல் நீரோடு விரவிப் புலப்படாததைப் போல, ஆன்மா முக்தியில் சிவத்தில் ஒடுங்கும். இதை 'நீரார் நிழல்' என்று நம் சைவ சித்தாந்தத்தில் குறிப்பிடுகிருர்கள்.

**கேள்வி: ஆன்மிகச் சாதனைகளைப் பின்பற்றும் சாதகனது மனம் உயர்ந்த நிலைக்குச் செல்கிறது. ஆனுல் அந்த உயர்ந்த நிலையிலேயே நிலைத்திருப்பதற்கு எல்லோராலும் இயல்வதில்லை. இதை நிலைத்திருக்கச் செய்ய உபாயம் யாது?**

**பதில்:** ஆற்றுநீர் காட்டாற்று வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடும்போது அது பயிர் பச்சைகளையும் கிராமங்களையும்கூட அழித்துவிடுகிறது. அதே நீரை அணை கட்டித் தேக்கிப் பயன்படுத்தும்போது விவசாயம், மின்சாரம், மீன் பிடித்தல் போன்ற பல ஆக்க வேலைகளுக்குப் பயன்படுகிறது.

மனமும் காட்டாற்று வெள்ளம் போன்றதுதான். அதை அதன் போக்கிலேயே விட்டுவிட்டால் எங்கு வேண்டுமானுலும் எப்படி வேண்டுமானுலும் மனிதனை இழுத்துச் சென்று அவனை அதோகதிக்கு ஆளாக்கிவிடும். அதே மனதைக் கட்டுப்படுத்தி முறையான ஆன்மிகப் பயிற்சிகளில் செலுத்துவதன் மூலம் முக்தி என்ற வாழ்க்கையின் லட்சியத்தையே ஒருவன் அடைந்துவிட முடியும்.

ஆற்றில் ஓடும் தண்ணீரை அணைகட்டித் தேக்குவது போல், மனதைக் கவர்ந்து செல்லும் வெளி விஷயங்களிலுள்ள வேகத்தைத் திடமான முயற்சியுடன் அடக்கிப் பழகுவதைவிட மனதை, நிலைநிறுத்த வேறு வழியில்லை.

'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்' என்பது ஆன்ருேர் வாக்கு. இந்த உண்மை, மனதை ஆண்டவனிடம் நிலைத்திருக்கச் செய்வதற்கும் பொருந்தும்.

ஒரு சாதகன் திரும்பத் திரும்பக் கடவுள் பற்றிய சிந்தனையில் மனதை ஈடுபடுத்த முயலவே வேண்டும்.

கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர், 'பழக்கத்தாலும் வைராக்கியத்தாலும் மனதை அடக்க முடியும்' (6.35) என்று கூறுகிருர். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கூறிய இந்தப் பதில்தான், தங்கள் கேள்விக்கு எத்தகைய பதிலை யார் கூறினுலும் சுற்றி வளைத்துச் சொல்லுவதாக இருக்கும்.

மனது நிலைத்திருக்கச் செய்யும் வழி பகவத்கீதையில் இரண்டாவது அத்தியாயத்தில் 'ஸ்திதப் பிரஞ்ஞ லட்சணம்' என்ற தலைப்பில் 2-55 முதல் 2-72 வரையில் விளக்கப்பட்டுள்ளது.

நிலையற்ற உலகப் பொருள்களும் சிந்தனைகளும் தாற்காலிகமாக மனதிற்கு உவப்பைத் தந்தாலும் முடிவில் அவை நமது அழிவிற்கே அடிகோலுகின்றன. இந்த உண்மையை மனம் பந்தப்படுத்தும் லௌகிக விஷயங்களில் செல்லும் போதெல்லாம் நமக்கு நாமே நினைவுபடுத்திக்கொள்வது மிகவும் நல்ல பயிற்சியாகும்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சாதகர்களுக்கு ஊக்கம் தரும் வகையில் பல உபதேசங்கள் வழங்கியுள்ளார். அவற்றில் பின்வரும் உபதேசங்களை இங்கே நாம் நினைவில் கொள்ளலாம்:—

''நீந்தக் கற்றுக்கொள்ள விரும்புகிறவன் சில நாள் நீந்துவதற்குப் பழக வேண்டும்.

ஒரே ஒரு நாள் நீந்தப் பழகியவுடன் கடலில் நீந்துவதற்கு ஒருவனும் துணியமாட்டான். அதே போல, பிரம்மமாகிய கடலில் நீந்த விரும்பினுல், முதலில் பல முறை பயன்படாத முயற்சிகள் செய்து தீர வேண்டும். அப்போதுதான் அங்கு நீந்தக் கூடிய சக்தி உனக்கு உண்டாகும்.

''புதியதாகப் பிறந்த கன்றுக்குட்டி, நிற்கக் கற்றுக்கொள்வதற்கு முன்னுல், தட்டுத் தடுமாறிப் பல முறை கீழே விழுகிறது. அது போல, ஆன்மிக வாழ்க்கையில் கடைசியாக வெற்றி பெறுவதற்கு முன்னுல் பல தவறுகள் அடிக்கடி நேரிடும்.

''எதுவரையில் மனிதரிடம் தெய்விகம் இருக்கும்? நெருப்பில் இருக்கும் வரையில் தான் இரும்பு செந்நிறம் கொண்டதாக இருக்கும். நெருப்பை விட்டு அகற்றியதும் அது கருநிறம் அடைந்துவிடும். அது போல, ஈசுவரனுடைய உறவு கொண்டாடும் வரையில்தான் மனிதன் ஈசுவரத்தன்மை பொருந்தியவனுக இருப்பான்.

''நமது உள்ளத்தில் சில சமயங்களில் மட்டுமே சாந்தி உண்டாகிறது. ஆனுல் ஏன் அது நிலைத்திருப்பதில்லை? மூங்கிலைப் போட்டு எரிக்கும் நெருப்பு, இடைவிடாமல் தூண்டப்படாமல் போனுல் விரைவில் அணைந்து போய்விடும். ஆன்மிக நெருப்பு எப்போதும் ஜொலித்துக் கொண்டிருக்க வேண்டுமானுல் இடையருத பக்தி அவசியம்.'' ,

*

# செய்திகள்

*ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் வெள்ள நிவாரணப் பணிகளை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் மேற்கொண்டது. அதன் ஓர் அங்கமாக ரூ. 11 லட்சம் செலவில் 200 புதிய வீடுகள் பெரிதும் பாதிக்கப்பட்ட மக்களுக்காகக் கட்டப்பெற்றன. மற்றும் அங்கு ஒரு கோவிலும் ஒரு பால்வாடியும் கட்டும் வேலை நடந்து வருகிறது.

*மேற்கு வங்காளத்தைச் சேர்ந்த மால்தாவில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வீடுகள் கட்டித் தரும் பணியை மிஷன் தொடர்ந்து நடத்தி வருகிறது.

*ஒரிஸ்ஸா, புரி மாவட்டத்தில் நடத்திய வெள்ள நிவாரணப் பணியின்போது 600 போர்வைகள், 1000 டவல்கள், 1000 வேட்டிகள், 1400 புடைவைகள், 1916 பெண்களுக்கான உடைகள் போன்றவை 114 கிராமங்களில் புரி ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கிளை விநியோகித்தது. இதே கிராமங்களில் பிரதி தினமும் 25,200 பேர்களுக்குத் தொடர்ந்து 24 நாட்களுக்கு உணவு வழங்கப்பட்டது.

*ஒரிஸ்ஸா, கட்டாக் மாவட்டத்தில் நடத்திய வெள்ள நிவாரணப் பணியின் போது 1760 புடைவைகள், 130 வேட்டிகள், 200 பனியன்கள், 100 சட்டை, 600 பெண்களுக்கான உடைகள் போன்றவை 15 கிராமங்களில் புவனேசுவரம் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கிளை விநியோகித்தது. இதே கிராமங்களில் பிரதி தினமும் 24,000 மக்களுக்குத் தொடர்ந்து 14 நாட்களுக்குச் சமைத்த உணவு வழங்கப்பட்டது.

*ஒரிஸ்ஸா, கோராபுட் மாவட்டத்தில் வெள்ளத்தினுல் பாதிக்கப்பட்ட அந்தர்ஹூளி பகுதியில் 76 வீடுகளை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கட்டி முடித்தது. இந்த வீடுகள் அமைந்த பகுதிக்கு, 'சாரதா பள்ளி (கிராமம்)' என்று பெயரிடப்பட்டு, நவம்பர் 17-ஆம் தேதி 76 மலைவாசிக் குடும்பத்தினருக்கு மிஷன் வழங்கியது.

*ஒரிஸ்ஸா, குனுப்பூர்ப் பகுதியில் வெள்ளத்தினுல் பாதிக்கப்பட்ட சர்லகம்பா பகுதியில் 176 வீடுகளை மிஷன் கட்டி முடித்தது. இந்த வீடுகள் அமைந்த பகுதிகளுக்கு முறையே ராமகிருஷ்ண பள்ளி, விவேக பள்ளி, பிரம்மானந்த பள்ளி என்று பெயரிடப்பட்டு, நவம்பர் 17-ஆம் தேதி, தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் மலைவாசிகளும் சேர்ந்த 176 குடும்பங்களுக்கு மிஷன் வழங்கியது.

*

# நீ சம்பாதித்தது உன்னுடையதல்ல!

ஏ. சுப்பிரமணியம்

**1894**-ஆம் ஆண்டு சுவாமி விவேகானந்தர் சிகாகோ சர்வ சமயப் பேரவையில் உரையாற்றி அமெரிக்காவை—குறிப்பாகச் சிகாகோ நகரையே—ஒரு கலக்குக் கலக்கிக்கொண்டிருந்த நேரம்.

எந்தச் சிகாகோ நகரில் நாளொன்றுக்கு ஆகும் செலவிற்குப் பயந்து அங்கே தங்க முடியாதவராக வேறு ஒரு நகரத்துக்கு ரெயில் ஏறினரோ, எந்தச் சிகாகோ நகரில் ரெயிலில் தங்கவும் இடமின்றி ஏரிகரையின் கடுமையான குளிரில் ரெயில் நிலையத்தில் திறந்து விடப்பட்ட ரெயில்பெட்டியில் தூங்கினரோ, அந்தச் சிகாகோ நகரின் மிகப் பெரும் பணக்காரர்களின் நாகரிகமயமான ஆடம்பரமயமான வீடுகள் எல்லாம் இப்போது அவருக்காகத் திறந்து விடப்பட்டு, அவருடைய வருகையைப் பெருமையோடும் ஆர்வத்தோடும் எதிர்பார்த்துக்கொண்டிருந்த நேரம் அது.

சுவாமிஜி பெரும் தொழிலதிபரும் செல்வருமான ஒருவர் வீட்டில் அப்போது தங்கியிருந்தார். ஒரு நாள் அந்த வீட்டில் தம் அறையில் மேசையின் முன் நாற்காலியில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார்.

அப்போது, மிக மிக அவசரமாகவும் அலட்சியமாகவும் அதிகாரத் தோரணையோடும் ஓர் உருவம், அந்த அறையின் வெளியில் காவலாக இருந்த வேலேக்காரனைத் தள்ளிக்கொண்டு சுவாமிஜியின் அறைக்குள் நுழைந்தது. ஐம்பத்தைந்து வயதும் கூர்மையான கண்களும் ஒல்லியாகவும் உயரமாகவும் இருந்த அந்த உருவம்தான் ராக்பெல்லர்.

உலகம் இதுவரை எத்தனையோ பணக்காரர்களைப் பார்த்திருக்கிறது. இனியும் எவ்வளவோ பணக்காரர்களைப் பார்க்க இருக்கிறது. அவர்கள் யாராலும் எட்டிப் பிடிக்க முடியாத பணக்காரர் அவர்தாம்.

உலகம் இதுவரை எத்தனையோ கொடூரமான-வெறி பிடித்த-வெற்றிகரமான-நினைத்ததைச் சாதிக்கும் வியாபார மன்னர்களைக் கண்டிருக்கிறது; காணவும் போகிறது. அவர்கள் அனைவரிலும் கொடூரமும் வெற்றிவெறியும் பிடித்த, நினைத்ததையெல்லாம் சாதித்த வியாபார மன்னன் அவர்தாம். பணம், பணம், மேலும் மேலும் பணம்! அதிகாரம், அதிகாரம்,



மேலும் மேலும் அதிகாரம்! இவற்றையே இரவும் பகலும் நினைத்து, மிகவும் அற்புதமாகத் திட்டமிடும் மூளையாலும், இரவும் பகலும் எந்த நேரமும் சளைக்காத உழைப்பாலும், ஆணவம் அலட்சியம் அதிகாரம் இவையே உடம்பின் இரத்தத்தில் தொண்ணூற்றென்பது விழுக்காட்டிற்கு மேல் ஊறிப்போனவர்.

அமெரிக்க மக்களும் வியாபாரிகளும் தொழிலதிபர்களும் பயங்கரக் கொலை கொள்ளைக்காரர்களைக் கண்டு பயந்ததை விட இவரைக் கண்டு அதிகம் பயந்தார்கள்.

ஏழையாகப் பிறந்த இவர் சிறுவயதில் இருபத்தைந்து டாலருக்கு ஓரிடத்தில் கணக்கு எழுதுபவராக வாழ்வைத் துவங்கினர். பிறகு பல வியாபாரங்கள், பலருடன் கூட்டு; இறுதியில் அப்போதுதான் அமெரிக்காவில் ஆரம்பமாகியிருந்த எண்ணெய் எடுக்கும் தொழிலில் இறங்கி, குரூரம், லஞ்சம் கொடுத்தல், மிரட்டுதல், பயங்கரப்போட்டி, பணமுடக்கம் ஏற்படுத்துதல், ரௌடித்தனம் முதலிய முறைகளைக் கொண்டு அமெரிக்காவில் அப்போது இருந்த எல்லா எண்ணெய்க் கம்பெனிகளையும் தாமே வாங்கி, ஸ்டாண்டர்ட் ஆயில் கம்பெனி என்ற பிரம்மாண்டமான பெட்ரோலியக் கம்பெனியை உருவாக்கினர்.

தம்முடன் கூட்டாளியாக இருந்து தம்மிடமிருந்து பிரிந்த ஒருவரின் எண்ணெய்க் கம்பெனியை அவர் இறந்ததும், அவர் மனைவியை மிரட்டியும் பயமுறுத்தியும் தாமே வாங்கித் தம் கம்பெனியோடு சேர்த்துக் கொண்டார். இந்த நிகழ்ச்சி நாட்டில் அனைவரும் அவரிடம் மாறாத வெறுப்புக் கொள்ள வைத்தது.

அத்தகைய ராக்பெல்லர்தாம் இப்போது சுவாமிஜியின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்.

சுவாமிஜி தங்கியிருந்த அந்த வீட்டின் சொந்தக்காரரான தொழிலதிபர் ராக்பெல்லருடன் ஒரு தொழிலில் கூட்டாளியாக இருந்தார். சுவாமிஜியின் ஆன்மிகத்திலும் அறிவிலும் மனங்கவரும் தோற்றத்திலும் பெரிதும் ஈடுபாடு கொண்ட அவர், மிகுந்த அன்போடு சுவாமிஜியை வரவேற்றுத் தம் வீட்டில் தங்கும்படிச் செய்திருந்தார். இந்தத் தொழிலதிபரும் அவருடைய நண்பர்களும் நாள்தோறும் சுவாமிஜியுடன் நெடுநேரம் உறவாடி மனஅமைதியும் தெளிவும் உற்சாகமும் பெற்றனர். இவர்கள் ராக்பெல்லரையும் சுவாமிஜியை வந்து காணும்படிப் பல முறை அழைத்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் மறுப்புக் கூறி வந்த ராக்பெல்லர், இப்பொழுது திடீரென்று, அமெரிக்காவில் பண்பாடுள்ளவர் கடைப்பிடிக்கும், முன் அறிவிப்புக் கொடுத்த பிறகே ஒருவரைக் காணச் செல்லுதல், சென்ற பிறகும் அவருடைய அறையில் நுழைய அனுமதி கிடைத்த பிறகு நுழைதல் முதலான பண்பாடுகளையெல்லாம் வீசியெறிந்துவிட்டு, சுவாமிஜியின் அறைக்குள் நுழைந்து நிற்கிறார்.

சுவாமிஜி தமது முகத்தை நிமிர்த்திக் கூட ராக்பெல்லரைப் பார்க்கவில்லை. மேஜைமேல் சாய்ந்து அமர்ந்தவர் சாய்ந்தபடியே உட்கார்ந்திருந்தார். 'நீ யார்? எதற்கு வந்திருக்கிறாய்?' என்றுகூடக் கேட்கவில்லை.

பிறகு சுவாமிஜி அமைதியோடு பேச ஆரம்பித்தார். ராக்பெல்லரின் பெயரைச் சொல்லி, அவர் யார் என்பதைக் கூறி அவரைப் பற்றிய இரகசியங்களை—தொழிலில் அவர் கடைப்பிடித்த வழிகளை—பயங்கரங்களை, தம்மைத் தவிர வேறு யாருக்கும் தெரியவே தெரியாது என்று ராக்பெல்லர் நினைத்திருந்த இரகசியங்களையெல்லாம் மிகவும் தெளிவாக, ஒன்றன்பின் ஒன்றாகத் தம் எதிரில் உள்ள புத்தகத்திலிருந்து படிப்பதுபோல, சுவாமிஜி சொல்லிக் கொண்டே போனார்.

இறுதியில், ''உன்னிடம் சேர்ந்திருக்கும் பணம் உன்னுடையதல்ல! அது வந்து சேருவதற்கான இடம் நீ; அவ்வளவுதான். உன் கடமை அந்தப் பணத்தின் மூலம் மக்களுக்கு நன்மை செய்வதுதான். உலக மக்களுக்கு உதவும் வாய்ப்பை உனக்குத் தரவே இவ்வளவு பணத்தையும் கடவுள் உனக்குக் கொடுத்திருக்கிறார். அதை ஏழைகளுக்கு, தேவையானவர்களுக்குக் கொடு'' என்றார்.

மேலும் சுவாமிஜி சொல்லுவதற்குள், 'எனக்குப் போய் ஒருவன் அறிவுரை சொல்வதா என்ன?' என்ற நினைப்பில், வந்தது போலவே, அமெரிக்கர்களின் பண்பாட்டின்படி 'போய் வருகிறேன்' என்றுகூடச் சொல்லாமல், ராக்பெல்லர் விருட்டென்று போய்விட்டார்.

ஒரு வாரம் கழிந்தது. சுவாமிஜி முன்போலவே அதே அறையில் மேஜையின் முன் நாற்காலியில் அமர்ந்திருந்தார். முன்பு போலவே அறைக்கு வெளியே இருந்த வேலைக்காரனை அலட்சியமாகத் தள்ளியபடி, எந்தவித முன்னறிவிப்பும் இல்லாமல், முன் அனுமதியும் பெறாமல் ஒரு காட்டான் போல் ராக்பெல்லர் மறுபடியும் சுவாமிஜியின் அறைக்குள் நுழைந்தார்.

சுவாமிஜியின் மேஜைமீது தம் கையில் கொண்டு வந்திருந்த காகிதக் கட்டை அப்படியே முன்பிருந்த அலட்சியத்தோடும் அதிகாரத்தோடும் போட்டார். அது அவர் தம்முடைய பரந்த செல்வத்தில்—ஒரு பெரும்பகுதியைப் பொதுமக்களின்—ஏழைகளின் நன்மைக்காக நன்கொடை தந்திருந்ததை எழுதிய பத்திரம். சுவாமிஜியின் எதிரில் அதைப் போட்டபிறகு, ''இப்போது உங்களுக்குத் திருப்தியாகத்தான் இருக்க வேண்டும். இதற்காக நீங்கள் எனக்கு நன்றி சொல்ல வேண்டும்'' என்றார் ராக்பெல்லர்.

இதைக் கேட்டதும் சுவாமிஜி முன்பு அமர்ந்தபடியே அமர்ந்திருந்தார். கண்களைத் திருப்பக்கூட இல்லை. தம் முன் போடப்பட்ட தாள்களை எடுத்து அமைதியாக ஒவ்வொன்றாகப் படித்தவர், படித்து முடித்து அதை மேஜை மேல் வைத்து விட்டு, ''நானல்ல நன்றி கூற வேண்டியவன். நீங்கள்தாம் எனக்கு நன்றி கூற வேண்டும்'' என்றார்.

ஆண்டுகள் பல கழிந்தன. 1902-ஆம் ஆண்டு சுவாமிஜி மகாசமாதி எய்தினர். ராக்பெல்லர் 1911-இல் தமது எழுபத்திரண்டாம் வயதில் உலகத்திலேயே மிகப் பெரியதாக வளர்ந்த தமது தொழிலைத் தம் மகன் ஜான் டேவிஸன் ராக்பெல்லரிடம் ஒப்படைத்து ஓய்வு பெற்றார். தமது திரண்ட செல்வத்தை ஏழைமக்களுக்குத் தானம் செய்து வந்த அவர், அந்தப் பெரும் செல்வம் எப்போதும், உலகின் எல்லா மக்களுக்கும், ஒரு நாள் இரண்டு நாள் என்று இல்லாமல் நிரந்தரமாக உதவ வேண்டுமென்று கனவு கண்டார். அதற்கான வழிகளில் மூழ்கினர்.

1937-இல் அவர் இறந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு அவருடைய கனவு முழுவதையும் செயல்திட்டமாகக் கொண்டு ராக்பெல்லர் பவுண்டேஷன் (Rockfeller Foundation) என்னும், உலகம் இது வரை காணாத அறநிலையம் எழுந்து நின்றது. உலகம் முழுவதுமுள்ள எல்லா மக்களுக்கும் எல்லாத் துறையிலும் எல்லா உதவிகளையும் இது செய்து வருகிறது.

ஆள் யாரும் இல்லாத, ஒரு தன்னந்தனியான அறையில், பக்கத்தில் நிற்கும் மனிதனின் முகத்தைக்கூடப் பார்க்காமல் சுவாமிஜியின் தெய்விகம் ராக்பெல்லர் என்ற மனிதன் மீது பாய்ச்சிய அற்புதம், இன்று உலகம் முழுவதுமே பயனடையும் மாபெரும் கொடை நிலையத்தை உலகத்திற்கு அளித்துள்ளது. *

---

## குஜராத் புயல் நிவாரணம்—ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பணி

1982 நவம்பர் மாதம் குஜராத் மாநிலத்தில் புயலால் பாதிக்கப்பட்ட பவநகர், அம்ரேலி, ஜூனகாட் மாவட்டங்களில் மக்கள் உயிருக்கும் சேதம் ஏற்பட்டது. இந்தப் புயல் கால்நடைகளையும் சொத்துக்களையும் பாதித்தது என்பது அனைவரும் அறிந்ததே.

புயல் பற்றிய தகவல் கிடைத்ததும் ராஜ்கோட் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமத்தின் தலைவர் சுவாமி வியோமானந்தரும் மற்றும் துறவிகளும் தொண்டர்களும் புயலினல் பெரிதும் பாதிக்கப்பட்ட உட்பகுதிகளுக்குச் சென்று நிவாரணப்பணிகளை மேற்கொண்டனர். மிகவும் பாதிக்கப்பட்ட 565 குடும்பங்களுக்கு ரூ. 75,000 மதிப்புள்ள உணவு தானியங்கள். சமையல் பாத்திரங்கள், உடைகள், புடைவைகள், போர்வைகள் போன்றவை இதுவரை விநியோகிக்கப்பட்டன.

இந்த நிவாரணப் பணிகளை ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மேற்கொண்டு தொடர்ந்து நடத்தி வருகிறது.

குஜராத் புயலால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்குப் பணமாகவோ பொருளாகவோ உதவக் கோருகிறோம். செக் அல்லது டிராப்டுகள் 'ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரம், ராஜ்கோட்' அல்லது 'ஸ்ரீராமகிருஷ்ண மிஷன், பேலூர் மடம்' என்ற பெயரில் பின்வரும் முகவரிகளில் ஏதேனும் ஒன்றுக்கு அனுப்பலாம்.

The General Secretary.
Ramakrishna Mission. (Relief)
P. O. Belur Math,
Dist. Howrah, West Bengal.
PIN: 711202

President
Ramakrishna Ashrama,
Jagnath Plot,
Rajkot-360001.

# லாடு பாவா

அலங்கார தேவராஜன்

மகாபக்த விஜயத்தில் இடம் பெற்றுள்ள ஒரு கதை இது.

**ஜோத்பூர்** சிறந்த நகரம். நீர்வளம் நிலவளம் நிறைந்த பேரூர். அந்த ஊரில் லாடு பாவா என்ற ஒருவர் இருந்தார். அவர் ஹரிபக்தியில் சிறந்து விளங்கினர்.

உயிர்கள் யாவற்றையும் தம் உயிரே போல் லாடு பாவா பாவித்து வந்தார். எவ்வுயிருக்காயினும் தீங்கு நேர்ந்தால் அவரது உள்ளம் துடிதுடிக்கும். 'அனைத்து உயிரும் ஆண்டவன் படைப்பே; ஒவ்வோர் உயிரும் ஒவ்வோர் உடலிலே தங்கியிருக்கிறது; நம் தேகத்திலே ஒரு சிறு காயம் பட்டுவிட்டால் நாம் எவ்வளவு துன்பமுறுகிறோம்? இது போலத்தானே பிற உயிர்களும்? ஒரு சிறு காயத்தையே பொறுத்துக்கொள்ள முடியாமல் நாம் துன்பமடையும்பொழுது, 'அம்மா!' என்று அலற, ஆருயிரைக் கொன்று அருந்துகிறார்களே! என்னே அவர்களின் தன்மை?' என்று இரங்குவார் லாடு பாவா.

லாடு பாவா, உலகிலுள்ள உயிர்களையெல்லாம் ஸ்ரீ ஹரியின் வடிவமாகவே எண்ணுவார். ஹரியின் அடியார்களிடம் அளவற்ற பக்தி பூண்டவர் அவர். ஹரிபக்தர்களோடு சேர்ந்து ஹரிநாம சங்கீர்த்தனம் செய்வார்.



அவர் திருமால் திருப்பதி பலவற்றையும் தரிசிக்க விரும்பினர்; ஆங்காங்குள்ள அடியார்களோடு கூடி ஆடியாடி அகங் கரையப் பாடவும் நினைத்தார். ஜோத்பூரை விட்டுப் புறப்பட்டார்; வழியிலுள்ள புண்ணியத் துறைகளிலெல்லாம் நீராடினர்; கோபாலன் கோயில் கொண்ட தலங்களில் சென்று வணங்கினர்; அடியார் பலரைக் கண்டு அஞ்சலி செய்தார்; காலூர் என்ற நகரை அடைந்தார்.

அந்த ஊரில் உள்ளோர் அனைவரும் இரக்கமற்றவர்கள். அவர்கள் காளியை ஆராதிப்பவர்கள். தினமும் தேவிக்கு ஒரு நரபலியிட்டு வழிபட்டு வந்தார்கள். இதை அறியாத லாடு பாவா அவ்வூரில் நுழைந்தார். அந்த ஊரார் அன்றைக்கு நரபலிக்கு ஆள் அகப்படாமல் தேடிக்கொண்டிருந்தனர். லாடு பாவாவைக் கண்ட அவர்கள், உடனே பிடித்துக் கட்டிக்கொண்டு போய்க் காளிகோயிலில் தேவிக்கு எதிரே நிறுத்தினர்கள். அசையாமல் மூன்று பேர் அவரைப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவன் வாள் ஒன்றை ஏந்தி வந்தான்; லாடு பாவாவை வெட்ட நெருங்கினன்.

அப்போது அவர் கண்ணபிரானை நினைத்தார். 'இப்போது என்னை நீ காப்பாற்றினுலும் சரி; கைவிட்டாலும் சரி' என்று கண்ணை மூடிக்கொண்டு கண்ணனைத் தியானித்தார். கண்ணனோடு பிறந்தவள்தானே காளி? கண்ணனை நினைக்கும்போது காளி வராமலிருப்பாளா? கோர ரூபத்தோடு அந்தக் கொடியவர் நடுங்கும்படி கோயிலிலிருந்து வெளியே வந்தாள். கொலைஞர் நால்வரையும் கொன்றாள். சாந்த ஸ்வரூபத்தோடு லாடு பாவாவின் முன்னே நின்று, ''பக்தரே!'' என்றாள். பாவா விழித்துப் பார்த்தார். காளிதேவி சாந்த வடிவம் கொண்டு தம் கண்முன்னே நிற்பதைக் கண்டார். தம்மைக் கொல்ல வந்த நால்வரும் கொல்லப்பட்டிருந்ததைப் பார்த்தார். இறந்த நால்வரையும் கண்டு இரக்கம் கொண்டார்.

தேவி லாடு பாவாவை நோக்கி, ''அன்பரே! என் அண்ணனுகிய கண்ணனே நீர் எண்ணினீர். அண்ணனின் அடியாரைக் காப்பது என் கடமை அல்லவா? இனி உமக்கு என்ன வரம் வேண்டும்? கேளும், உடனே தருகிறேன்'' என்று உரைத்தாள்.

லாடு பாவா தேவியை வணங்கினர்; ''தேவி! நீ இதுவரை கொலைக்கு இசைந்திருந்ததையும், இவ்வூரார் கொலை செய்து வந்ததையும் ஒழித்தால் போதும். இந்த ஊரார் கொலைபாதகர்கள் என்ற பழி நீங்க வேண்டும்; அவர்கள் அந்தப் பாவத்திலிருந்து தப்ப வேண்டும்; அன்றியும், இங்கு உள்ளோர் அனைவரும் சத்துவ குணத்தோடு ஹரிபஜனை செய்யும்படி அவர்களைத் திருத்த வேண்டும், வேறு எந்த வரமும் எனக்கு வேண்டியதில்லை'' என்று காளியை வேண்டினர்.

காளி அவரை அகமலர்ந்து நோக்கி, ''ஹரிபக்தரே! நீர் வேண்டியபடியே செய்கிறேன்'' என்று கூறி, காவூரை ஆண்ட அரசன் கனவில் தோன்றி, ''அரசே! இவ்வூரார் எல்லாரும் கொலைத் தொழிலை விட வேண்டும், என் கோயிலில் இன்று முதல் நரபலி நிறுத்தப்பட வேண்டும். இப்பொழுது என் கோயிலில் வந்து தங்கியிருக்கும் திருமாலடியாரை வணங்கி அவருக்கு ஆட்பட்டு ஒழுக வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் உன்னையும் உன் ஊரிலுள்ளவரையும் நாசம் செய்து விடுவேன்'' என்று சொல்லி மறைந்தாள்.



பொழுது புலர்ந்தது. அரசன் விழித்தெழுந்தான். காளிகோயிலுக்கு விரைந்தான். அங்கே மாண்டு கிடந்த நால்வரையும் கண்டு அதிசயித்தான். பக்திப் பெருக்கோடு பராசக்தியைப் பரவினன். அங்கே தியானத்தில் இருந்த லாடு பாவாவின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினன்.

பாவா பார்வேந்தனுக்கு அருள்புரிந்தார். அரசன் அக்கணமே அரண்மனை திரும்பினன். பறையறைவோரைக்கொண்டு, ''இவ்வூரில் யாரும் இனி உயிர்வதை செய்யலாகாது. காளிகோயிலில் வந்திருக்கும் ஹரிபக்தரை எல்லோரும் சென்று வணங்கி அவரருள் பெற வேண்டும்'' என்று பறையறைவித்தான்.

பறையொலி கேட்ட மக்கள் பக்தரைத் தேடி ஓடினர். பாவாவின் பாதங்களில் பணிந்தனர். தாங்கள் செய்த பாவத்திற்கு மன்னிப்பு வேண்டினர். பாவா கண்ணனை நினைத்தார். கண்ணன் அவர் கண் முன் நின்றுன். அவன் பக்த பராதீனன் அல்லவா? பக்தர் நினைக்கவே பறந்தோடி வந்தான். பாவா கமலக் கண்ணனைக் கண் குளிரக் கண்டார். மகிழ்ச்சி பொங்க மலர் மகள்நாதன் மலரடி சூடினர். ஆனந்தக் கண்ணீர் பெருக, அவ்வூர் மக்களுக்கு அருள்செய்ய அச்சுதனை வேண்டினர். கண்ணன் அவ்வாறே கருணை செய்து மறைந்தான். காவூர் மக்கள் கொலைப் பாவத்திலிருந்து காப்பாற்றப்பட்டனர்.

அன்று முதல் அவ்வூரிலுள்ளோர் அனைவரும் ஹரிநாம சங்கீர்த்தனம் செய்யலாயினர். லாடு பாவா கடல்வண்ணன் அருள் பெற்று மற்றும் பல திருத்தலங்களுக்குச் சென்று ஹரிநாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார்.

லாடு பாவா பிற உயிர்களைத் தம் உயிரைப் போல நினைத்தார்; அதனுல் அவர் உயிர் காக்கப்பட்டது. நாமும் மன்னுயிரெல்லாம் தன்னுயிரெனப் போற்றி வாழ்வோமாக.

*

ஸ்ரீராமகிருஷ்ண மடம், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் தலைவர் **ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்** அவர்கள் 1983 ஜனவரி 11-ஆம் நாள் சென்னைக்கு வருகிறுர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். அவர் சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் ஜனவரி 17-ஆம் தேதி வரை தங்கியிருப்பார்.




# பாரதியின் ஆன்மிகச் சிந்தனைகள்

**சாகித்ய!அகாடமியின் சார்பாக டிசம்பர் 13-ஆம் நாள் சென்னை, ராஜாஜி ஹாலில் பாரதியார் பற்றிய கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் சுவாமி கமலாத்மானந்தர் நிகழ்த்திய உரையின் சுருக்கம் விஜயதீபமாக இங்கே வெளியிடப் பெறுகிறது.**

### விவேகானந்தர் அடிச்சுவட்டில்

தேசபக்த மெய்ஞ்ஞானி என்று பாரத மக்களால் போற்றப்பெறுபவர் சுவாமி விவேகானந்தர். அவரது அடிச்சுவட்டைப் பின்பற்றித் தேச பக்தி, தெய்வ பக்தி என்ற புனித யாத்திரையை மேற்கொண்டவர்களில் இன்று நூற்றுண்டு விழாக் காணும் மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும் ஒருவர்.

''சுவாமி விவேகானந்தரின் வேதாந்தப் பிரசாரமே தேசபக்தியின் தாய்முயற்சியாகும்'' என்பது பாரதி வாக்கு. இந்தப் பாரதி வாக்கில் தோய்ந்து ஆராய்வோமானல் பாரதியின் ஆளுமை முழுவதையும் சரியாகத் தரிசனம் செய்யலாம்.

### பாரதிக்கு அமைந்த ஆன்மிகப் பின்னணி

ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் ஏனைய பல மகான்களாலும் பேணி வளர்க்கப்பெற்ற ஆன்மிகப் பூமி தமிழகம். இங்கே ஆன்மிகச் சிந்தனைகளும் அனுபவங்களும் செழிப்புடன் வளர்ந்தோங்கியுள்ளன.

இத்தகைய ஒரு பின்னணியில் நூறு ஆண்டுகளுக்கு முன்பு, 1882-ஆம் வருடம் டிசம்பர் 11-ஆம் நாள் பாரதி பிறந்தார்.

பாரதி தமது இளம் வயதிலேயே இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்த நிலையில் தெய்விக உணர்வுகளைப் பெற்றிருக்கிறர். இதை அவரே தமது சுயசரிதையில் சித்திரித்திருக்கிறர்.

1898 முதல் 1902-ஆம் ஆண்டு வரை அதாவது தமது 16-ஆவது வயதிலிருந்து 21 வயது வரையிலும் பாரதியார் காசி க்ஷேத்திரத்தில் வாழ்ந்தார்.

ஹிந்து மதத்திற்கும் ஹிந்துப் பண்பாட்டிற்கும் இதய ஸ்தானமாகக் காசி காலமெல்லாம் விளங்கி வந்திருக்கிறது.

பாரதியை நினைக்கும்போது அவரது தலைப்பாகையும் மீசையும் நம் நினைவுக்கு வரவே செய்யும். தலைப்பாகை அணிவதும் மீசை வைத்துக்கொள்வதும் ஆகிய இரண்டையும் காசியில்தான் பாரதி ஆரம்பித்தார்.

எட்டையபுரத்தை விட்டு நீங்கிய பாரதிக்குக் காசியின் தொடர்பு கிடைத்தது ஒரு பெரும் திருப்புமுனையாக அமைந்தது.

காசியிலிருந்து தமிழகம் திரும்பியபோது பாரதி முற்றிலும் புதிய மனிதராக மாறியிருந்தார்.

### விவேகானந்த அன்பர்களிடையே

1905-ஆம் ஆண்டு காசியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் பாரதியார் கலந்துகொண்டார். அப்போது கல்கத்தா சென்ற பாரதியார் சகோதரி நிவேதிதையைச் சந்தித்தார். நிவேதிதையைக் குருவாக ஏற்றதன் மூலம் பாரதி, ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த பாரம்பரியத்தில் தம்மையும் இணைத்துக்கொண்டிருக்கிறர்.

தேசிய எழுச்சியூட்டும் 'சுதேச கீதங்கள்' என்ற தமது இரண்டு கவிதைத் தொகுப்புக்களையும் பாரதியார் சகோதரி நிவேதிதைக்கே சமர்ப்பணம் செய்ததில் சூட்சுமம் இருக்கிறது. அந்தச் சூட்சுமத்தை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தமது சமகால அரசியல் தலைவர் எவருக்கும் 'சுதேச கீதங்கள்' நூலைச் சமர்ப்பணம் செய்யாமல் பாரதியார் சகோதரி நிவேதிதைக்கே சமர்ப்பணம் செய்திருக்கிறர். இதிலிருந்து,

பாரதி வகுத்துக்கொண்ட குறிக்கோளை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

வங்கத்தில் தோன்றிய வந்தே மாதரம் இயக்கமும் அதன் தொடர்பாக எழுந்த சக்தி வழிபாடும் பாரதியை முழுமையாக ஆட்கொண்டன.

பாரதியார் சுதேசமித்திரன் பத்திரிகையின் ஆசிரியராவதற்கு, விவேகானந்த அன்பர்களே காரணமாக இருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த இயக்கச் சார்புடைய சுப்பிரமணிய சிவா, வ. உ. சி., டாக்டர் நஞ்சுண்ட ராவ், அழகியசிங்கப்பெருமாள் போன்றவர்களின் தொடர்பும் பாரதிக்குக் கிடைத்தது குறிப்பிடத்தக்கது.

**புதுச்சேரியில் பாரதி**

பாரதி புதுச்சேரிக்குச் சென்றது அரவிந்தரின் தொடர்பைப் பெற வழி வகுத்தது. மற்றும் கோவிந்தசாமி, யாழ்ப்பாணத்துச் சாமி, மாங்கொட்டைச் சாமி, குள்ளச் சாமி போன்ற பல சந்நியாசிகளின் தொடர்பும் பாரதிக்கு இருந்தது. இவர்களில் சிலர் சித்த புருஷர்களாக விளங்கினர் என்பதைப் பாரதியின் வாக்குகளிலிருந்து அறிகிறோம். எனவே, மேற்கூறிய பெரியோர்களின் தொடர்பு பாரதிக்கு நல்ல ஓர் ஆன்மிகச் சூழ்நிலையை உருவாக்கித் தந்துள்ளது.

இதுவரை பாரதிக்குப் பின்னணியாக அமைந்த ஆன்மிகச் சூழ்நிலைகளைப் பார்த்தோம். இனி, பாரதியின் ஆன்மிகச் சிந்தனைகள் சிலவற்றை ஆராய்வோம்.

**சாதகனின் நிலை**

உலகில் பல நிகழ்ச்சிகளையும் நாம் சந்திக்க நேருகிறது. அவை நமது உள்ளத்தையும் பாதிக்கவே செய்கின்றன. அத்தகைய தருணங்களில், விவேகியான ஒரு பக்தன் தெய்வத்தின் துணையையே நாட வேண்டும். இதைத் தன் உள்ளத்திற்கு அறிவுறுத்தும் வகையில் பாரதி பின்வருமாறு கூறுகிறார்—

மூட நெஞ்சே, முப்பது கோடி
முறை உனக்குரைத்தேன்; இன்னும்
மொழிவேன்:
தலையிலிடி விழுந்தால் சஞ்சலப்படாதே;
எது நிகழினும் 'நமக்கேன்?' என்றிரு;
பராசக்தி யுளத்தின்படி உலகு நிகழும்.

பாரதியின் இந்த வாசகங்கள், 'நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானே இதற்கு நாயகமே!' என்ற திருநாவுக்கரசரின் வாக்குகளை நினைவுபடுத்துகின்றன.

மேலும், பாரதி தமது 'சக்தி' என்ற வசன கவிதையில், ''சென்றது கருதமாட்டேன். நாளைச் சேர்வது நினைக்கமாட்டேன். இப்போது என்னுள்ளே சக்தி கொலு வீற்றிருக்கிறாள். அவள் நீடூழி வாழ்க. அவளைப் போற்றுகின்றேன், புகழ்கின்றேன், வாய் ஓயாமல் வாழ்த்துகின்றேன்'' என்கிறார்.

சாதகராக உள்ள ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையில் ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயத்தில், 'ஆண்டவனிடம் பக்தி பெருக வேண்டும்; ஆண்டவனின் அருளைப் பெற வேண்டும். அதற்குத் தடையாக என்னிடமுள்ள இழிந்த இயல்புகள் நீங்க வேண்டும்' என்று நினைக்கவே செய்கிறார்கள்.

இந்த நிலையில் இருந்து, பாரதியும் பல கருத்துக்களைக் கவிதையிலும் உரைநடையிலும் வெளிப்படுத்தியிருக்கிறார். இதற்கு ஓர் உதாரணமாக, பாரதியின் 'மகா சக்திக்கு விண்ணப்பம்' என்ற கவிதையைச் சொல்லலாம். அதில் அவர்—

மோகத்தைக் கொன்றுவிடு—
அல்லால் என்றன்
மூச்சை நிறுத்திவிடு;

தேகத்தைச் சாய்த்துவிடு—
அல்லால் அதில்
சிந்தனை மாய்த்துவிடு;

யோகத்திருத்திவிடு—அல்லால் என்றன்
ஊனைச் சிதைத்துவிடு.

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

கள்ளம் உருகாதோ—அம்மா! பக்திக்
கண்ணீர் பெருகாதோ?

என்று பலவாறு தம் உள்ளக் கிடக்கையைப் பராசக்தியிடம் தெரிவிக்கிறார்.

(தொடரும்)



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600004

## 1983 ஜனவரி & பிப்ரவரி மாத நிகழ்ச்சிகள்

**ஸ்ரீமத் சுவாமி விவேகானந்த ஜயந்தி**

| | |
|---|---|
| 5-1-83 புதன்கிழமை | விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன காலை 5 மணி முதல் பகல் 11 மணி வரை நடைபெறும். |
| | காலை 8-30 மணிக்கு, சென்னை மெரினா கடற்கரையில் நிறுவப்பட்டுள்ள சுவாமி விவேகானந்தரின் திருவுருவச் சிலைக்கு மலர் மாலைகள் அணிவித்தல். |
| | மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7-30 மணிக்கு, 'சுவாமி விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள். |

**ஸ்ரீமத் சுவாமி விவேகானந்த ஜயந்தி—பொதுக்கூட்டம்**

| | |
|---|---|
| 9-1-83 ஞாயிறு | தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர் |
| மாலை 5-30 மணிக்கு | பேசுபவர்: டாக்டர் சி. பாலசுப்ரமண்யம் (சென்னை பல்கலைக் கழகம்) |

**விசேஷ தினங்கள்**

| | |
|---|---|
| 1-1-83 சனிக்கிழமை | கல்பதரு தினம் |
| 14-1-83 வெள்ளி | பொங்கல் |
| 16-1-83 ஞாயிறு | சுவாமி பிரம்மானந்த ஜயந்தி & மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் |
| 18-1-83 செவ்வாய் | சுவாமி திரிகுணாதீதானந்த ஜயந்தி |
| 19-1-83 புதன் | சரஸ்வதி பூஜை |
| 28-1-83 வெள்ளி | சுவாமி அத்புதானந்த ஜயந்தி |
| 11-2-83 வெள்ளி | மகா சிவராத்திரி—இரவு 8 மணியிலிருந்து இரவு முழுவதும் பூஜை |

ஜனவரி 9, 16, 25 & பிப்ரவரி 8, 23 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**சத்சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (ஜனவரி 2, 23 & பிப்ரவரி 6, 20)
ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (ஜனவரி 16, 30 & பிப்ரவரி 13, 27)

### சொற்பொழிவு—தமிழ்

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (ஜனவரி 2 & பிப்ரவரி 6)
2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (ஜனவரி 16 & பிப்ரவரி 13)
3. இராமாயணம்—திரு ஆர். கோதண்டராமன் (ஜனவரி 23, 30 & பிப்ரவரி 20, 27)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஜனவரி 16, 30 & பிப்ரவரி 13, 20, 27 ஆகிய ஞாயிற்றுக் கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

பகல் 2-30 மணி முதல் மாலை 3-30 மணி வரை கல்லூரி மாணவர்களுக்கு 'இந்து மதம்' என்ற தலைப்பில் எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் சுவாமி ராகவேசானந்தர் உரை நிகழ்த்துவார்.

### வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-30 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — வைராக்கிய சதகம்—சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் — ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் — பகவத்கீதை—பிரம்மசாரி சின்மய சைதன்யா
5. வெள்ளி — துளசி ராமாயணம்—சுவாமி வீதபயானந்தர்
6. சனி — அத்யாத்ம ராமாயணம்—பி. ராமகிருஷ்ணன் (ஜனவரி 1 & பிப்ரவரி 5)

### வேறு சில நிகழ்ச்சிகள்

ஜனவரி 9, 23 & பிப்ரவரி 6, 20 தேதிகளில் காலை 9-30 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'தியானம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம்: 10, ராஜம்மாள் தெரு, லட்சுமிபுரம், ஷெனாய் நகர், சென்னை-600 010.

ஜனவரி 8 & பிப்ரவரி 12 தேதிகளில் மாலை 5-30 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'பகவத்கீதை' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை-600 010.

ஜனவரி 16 & பிப்ரவரி 20 தேதிகளில் காலை 9-30 மணிக்கு, திரு வி. ராமமூர்த்தி 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் உரையாற்றுவார். இடம்: H/28/F, காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை-41.

ஜனவரி 30 & பிப்ரவரி 27 தேதிகளில் காலை 9-30 மணிக்கு திரு வி. ராமமூர்த்தி 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் உரையாற்றுவார். இடம்: சுவாமி விவேகானந்தர் நினைவு மண்டபம், அன்னதான சமாஜம், பெரம்பூர், சென்னை-11.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்

தொலைபேசி: 71231 — ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004